

## தேசபந்து தாஸர்

பொதுநலத்திற்கென்றே புகழுடனுதித்த தேசபந்து தாஸர் இவ்வுலகவாழ்வை நீத்து விண்ணுலகடைந்து ஓராண்டாகின்றது. அவருடைய சிரார்த்த தினம் சமீபத்தில் இந்தியாவெங்கும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இப்பெருந்தகையாரின் சரித்திரத்தை நம் சந்தாநேயர்கள் பலரும் அறியவேண்டுமென்ற எண்ணத்துடன் யாம் அதனைச் சுருக்கமாக இச் சஞ்சிகையின் 11-ம் பக்கத்தின்கண் வெளியிட்டு ஷ தினக் கொண்டாட்டத்திற் கறிகுறியாக இந்த உருவப் படத்தையும் இங்குச் சேர்த்திருக்கிறோம்.




யாதொரு ஜாதி மத வித்யாசமின்றி உலகிலுள்ள மக்களுக்கு
'ஆனந்தன்' ஆனந்தமளிக்கிறான்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளேத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 15 | சுக்கிலஹு ஆடிமீ ௧௳ | 1929ஹு ஜூலைமீ 16௳ | பகுதி 1

## கடவுள் வணக்கம்.

சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றில்
தொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைபோற் றானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணாது கேட்டவெல்லாம்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடுங்
கபடநாடக சாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்று லடக்க வசமோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

---

வாயுண்டு வாழ்த்த மௌனஞ் செய்போது மௌனவருட்
டாயுண்டு சேயென்ன வென்னைப் புரக்கச் சதானந்தமா
நீயுண்டு நின்னைச் சரண்புகநா னுண்டென்னெஞ் சமையா
தீயுண் டிருந்த மெழுகலவோ கதிசேர் வதற்கே. (2)

---

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே. (3)

## அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) தாயானவள் சொல்லினுல் தன் கருத்துக்கு இணங்கி வராத குழந்தையைத் தொட்டிலில் வைத்து ஆட்டி ஆட்டி இணங்கும்படி தொடையைக் கிள்ளுதல்போல ஒன்றில் நினைப்பை யுண்டாக்கும். உண்டாக்கி யழிக்கும் பொல்லாத வாதனை யென்று சொல்லப்படுகிற அஞ்ஞான பூமிகளேழனுள் வந்து தலை சுழற்றி யாடிக்கொண்டிருக்கும். கணவனிடத்து அடங்கியிராத பெண்போலத் தானே வெளிவந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கும். கல்லுக்கும் இரும்புக்கும் மிக்க வன்மையினைக் கற்பிக்கும். காணுமல் கேட்டவற்றை யெல்லாம் தான் கண்டதாகக் காட்டி அனுவாச் சுருக்கிடும். கபட நாடக சாலம் எல்லாவற்றையும் இயற்ற வல்லதாகிய இந்த மனமாயை யெளியவனுகிய என்னுல் வென்றடக்கக் கூடுமோ? இம்மை மறுமையென்னு மிரண்டிடத்தும் உயிர்க்குயிராகி எவ்விடத்திலும் வியாபித்திருக்கின்ற வஸ்துவே.

சங்கற்ப விகற்பங்களால் சகலரையும் ஆட்டி அலைத்து மாயைப் படுகுழியிற்றள்ளும் எப்போதும் சலனமுடைய மனத்தை யடக்குதலே தலைமையான செய்கை.

ஆனுல் அச்செய்கை சீவனுல் முடியாது. ஈசனுல் தான் முடியும். எவ்வாறெனில் ஈசன் எங்கு மிருப்பதால் யாவு மறிவானென்றும், உயிருக்குயிராகியவனுகலின் அது அவன் கடமை என்பதை விளக்க, இகபர மிரண்டிலும் உயிரினுக்குயிராகி யெங்கு நிறைகின்ற பொருளே யென்ருர்.

2. ஒருவராலேயும் அடக்க முடியாத மனதை அடக்கவேண்டுமானுல் முழுமுதற் கடவுளாகிய இறைவன் முத்தி யடைவதற்குக் காரணமான கருவிகளும் அவற்றைக்கொண்டு அடைவதற் கேதுவாயுள்ள ஆன்மாவும், அவ்வான்மா அடையவேண்டிய நன்மையைத் தருதற்குத் தன்னையுங்காட்டியுள்ளானுதலாலே மனம் அடங்க முயலுவோர்க்கு இடையூ றில்லையென்பது இதனுல் விளங்குகின்றது.

சேய்—பிள்ளை
புரக்க—காப்பாற்ற
சரண்—அடைக்கலம்
கதி—மோட்சம்

3. அடியேனைப் பாதுகாத்தல் தேவரீருக்கே முறைமையென்று கருதும் பழக்கத்தினையே தந்தருளல் வேண்டுமென்று போற்றுகின்ருர்.




# நமது போதினியின் 15-வது ஆண்டு

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபியாயும், யாவருடைய கோரிக்கைகளையும் ஈடேற்றும் கருணாநிதியாயும் விளங்கும் ஆண்டவனது கிருபையால் நமது "ஆனந்தபோதினி"யின் பதினான்காம் ஆண்டு நிறைவுற்று பதினைந்தாம் ஆண்டு உதித்திருக்கிறது.

"ஆனந்தபோதினி" என்ற அழகிய இனிய நாமத்தைக் கேட்டிராத தமிழர் ஒருவரும் இருக்கமாட்டார் என்றே நம்புகிறோம். தமிழ்நாட்டிலும் தமிழ் மக்கள் குடியேறியிருக்கும் பிற நாட்டிலும் எந்த மூலை முடுக்கை நோக்கினும் "ஆனந்தபோதினி"யின் அறிவுச் சுடர் ஒளிவீசி நிற்பதைக் காணலாம். தமிழ்நாட்டில் உள்ள பெரிய பெரிய ஜமீன்தார்கள், பிரபுக்கள், ஜட்ஜுகள், வக்கீல்கள், உத்தியோகஸ்தர்கள், வர்த்தகர்கள், தொழிலாளர்கள் முதல் அதாவது "தோட்டி முதல் தொண்டைமான்"வரை எல்லாரும் நமது "ஆனந்தபோதினி"யை அன்புடன் வரவேற்று உபசரிக்கின்றனர். வைணவர், சைவர்,த் அவைதிகள், கிறிஸ்தவர், சமணர், பௌத்தர், முஸ்லிம்கள் முதலியவர்களின் மத தத்துவங்களையும் அவ்வம்மதப் பெரியார்களின் சிறப்புக்களையும் நமது "ஆனந்தபோதினி" அவ்வப்போது போதித்து வருவதால் மேற்குறித்த சமயங்களைச் சார்ந்த எல்லாருக்கும் "ஆனந்தபோதினி" உற்றவழி காட்டியாகவும் தோழனாகவும் விளங்குகிறது.

"பிராமணன்" "க்ஷத்திரியன்" "வைசியன்" "சூத்திரன்" "பஞ்சமன்" என்ற வேற்றுமை "ஆனந்தபோதினி"க்கு இன்மையால் எல்லா வகுப்பினரும் இதன்பால் பேரன்பு செலுத்தி ஆதரித்து வருகின்றனர். "ஆனந்தபோதினி"யைப் போற்றிப் பாராட்டாத

ஆசிரியரும் மாணவரும் இல்லை என்றே கூறலாம். ஆயிரக்கணக்கான பெண்மணிகள் அனுதினமும் போற்றிப் புகழும் சிறப்பு நமது "ஆனந்தபோதினி"க்கே உரியதாகும். நேயர்களே! சுருங்கக் கூறுமிடத்து சென்ற பதினன்கு ஆண்டுகளாகச் சுயநலங் கருதாமல் தொண்டாற்றி வந்ததின் பலனாக தமிழ்நாட்டில் வாழும் பல திறப்பட்ட மக்களுடைய முழு ஆதரவையும் அன்பையும் "ஆனந்தபோதினி" கவர்ந்திருக்கிறது என்று கூறுவது மிகையாகாது.

தற்காலம் நமது தமிழகம் தடுமாற்றம் அடைந்து திகைத்து நிற்கிறது. சாதி சமய வேற்றுமைகளும் மூடப்பழக்க வழக்கங்களும் நிறைந்து மக்கள் முன்னேற்றத்துக்கு அவை தடைசெய்து நிற்பதால் ஒரு சிலர் மதத்தையே அழித்து ஒழிக்கவேண்டும் என்கின்றனர். நம்முடைய ஆன்ம விளக்கத்துக்குக் காரணமான ஒழுக்கங்கள் எல்லாம் மதத்தோடு பிணைக்கப்பட்டிருப்பதால் மதத்தை அழிக்கவேண்டும் என்பது இப்போது பல தீமைகளுக்குக்குக் காரணமாக முடிந்துவிடும். மக்களுக்குத் தக்க கல்வி அறிவு உண்டாகும்படியான முயற்சியில் தீவிரமாக ஈடுபட வேண்டும். அப்போதுதான் நமது நாட்டைப் பிடித்து நிற்கும் தீமைகள் தொலைந்து விரைவில் முன்னேற்றத்திற்குரிய வழியுண்டாகும். நமது "ஆனந்தபோதினி" இந்த முறையில் ஈடுபட்டு உழைத்து வருதல் எல்லாருக்கும் தெரிந்த விஷயமே.

ஒரு நாட்டின் முன்னேற்றம் அந்நாட்டின் பாஷை முன்னேற்றத்தைப் பொறுத்திருக்கிறது. இக்காலத்தில் ஆங்கிலம் அரசியல் மொழியாயிருப்பதால் தமிழ்மொழிக்குள்ள மதிப்பு நாளுக்குநாள் குறைந்து வருகிறது. ஆங்கிலப் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தமிழ் வளர்ச்சிக்கே இடமில்லாமல் போகும்படியான விதிகளைச் சர்வ கலாசாலையினர் புதிது புதிதாக அமைத்து வருகின்றனர். இது மிகவும் வருந்தத் தக்க விஷயமாகும். புதிய புதிய ஆராய்ச்சி நூல்கள் தமிழில் வெளி வரும்படியாகச் செய்வதோடு பண்டைய இலக்கண இலக்கிய ஆராய்ச்சிகளையும் வெளியிட்டுத் தமிழ் மொழியை வளர்க்க வேண்டும். விஞ்ஞானம், கைத்தொழில், வியாபாரம், விவசாய சம்பந்தமான ஆராய்ச்சி நூல்கள் தமிழில் ஏராளமாக வெளிவர வேண்டும். நமது "ஆனந்தபோதினி" சென்ற பதினன்கு ஆண்டுகளாக எளிய இனிய தமிழ் நடையையே தழுவி வருவதும், தமிழ் மொழியின் சிறப்பு, அதன் வளர்ச்சிக்கான

ஆராய்ச்சி முதலியவற்றைத் தாங்கி வருவதும் நேயர்கள் உணர்வார்கள். இனிமேலும் இந்த விஷயத்தில் "ஆனந்தபோதினி" ஊக்கத்தோடு உழைக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

எதிர் காலத்தில் ஒரு நாட்டின் மாட்சி மிக்க மக்களாக வரவேண்டியவர்கள் மாணவர்கள். மாணவர்கள் இளமை முதலே அறிவும் ஒழுக்கமும் உடையவர்களாக வளர்வார்களானால் நாட்டு முன்னேற்றத்தைப் பற்றி நாம் அதிக கவலைகொள்ள வேண்டுவதில்லை. நமது "ஆனந்தபோதினி" மாணவர் விஷயத்தில் தனிக் கவனம் செலுத்தி வருதல் கண் கூடு.

நமது நாட்டுப் பெண் மக்கள் நிலைமை பரிதாபகரமானது. "பேதைமை என்பது மாதர்க் கணிகலம்" என்ற காலம் மலையேறி விட்டது. இது பெண்கள் விடுதலைக் காலம். மேனாட்டு நாகரிகம் தீவிரமாகப் பரவி வரும் இந்நாளில் பெண் மக்கள் நலத்தை முக்கியமாய்க் கவனிக்க வேண்டும். இவர்கட்குத் தகுந்த கல்வியும் பொருளாதார உரிமையும் கொடுக்கவேண்டும். இவைகள் பெண்களுக்கு இல்லாமையினாலேயே அவர்கள் மிருகங்களினும் கேவலமாக நடத்தப்படுகின்றனர். இவ்விஷயத்தில் நமது "ஆனந்தபோதினி"யின் மாதர் பகுதி பலருக்கும் மகிழ்ச்சியை ஊட்டி வருவது எல்லாருக்கும் தெரிந்ததே.

நேயர்களே "ஆனந்தபோதினி"யின் ஊழியத்தைத் தமிழுலகம் மதித்திருக்கிறது என்பதற்கு மாத சஞ்சிகை 20000-பிரதிகளுக்கு மேலாக வெளியிடப்படுவதும், குறுகிய அதாவது சுமார் 5-மாதங்கட்கு முன்னர் தோற்றுவித்த "ஆனந்தபோதினி" வாரப் பத்திரிகை 3500-பிரதிகளுக்குமேல் வெளியிடப்படுவதுமே போதிய அத்தாட்சியாகும். பொதுநலங் கருதியே மாத சஞ்சிகைக்கு ஆண்டுச் சந்தா ஒரு ரூபாயாகவும் வாரப் பத்திரிகைக்கு மூன்று ரூபாயாகவும் ஏற்பாடு செய்திருக்கின்றோம் என்பதை யாம் கூறுதல் மிகையாகும். நமது வாரப்பத்திரிகை மாத சஞ்சிகையைப்போலவே தமிழர் இருக்கும் இடமெல்லாம் நாடி அவர்களுக்கு ஆனந்தத்தை யூட்டி வருகிறது. சந்தாதாரர்களின் அபிமானம் அதிகம் ஏற்படின் வாரப் பத்திரிகையை தினப் பத்திரிகையாக மாற்றப்பட வேண்டுமென எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோமாக.

நாம் சென்ற இரண்டு சஞ்சிகைகளில் வேண்டிக் கொண்டபடி அநேக சந்தாதாரர்கள் இவ்வருடம் சந்தாத் தொகையை முன்

பணமாய் அனுப்பி நமது சிரமத்தைக் குறைத்தனர். ஆயிரக்கணக்கான சந்தாதாரர்கள் வி.பி. மூலம் அனுப்பிய பத்திரிகையைப்பெற்று எம்மை ஆதரித்தனர். ஆனால் சிலரோ பத்திரிகை வேண்டாமென்று முன்னமே எமக்குத் தெரிவிக்காமல் பத்திரிகை அவர்களிடம் வி. பி யில் சென்றதும் திருப்பி யனுப்பிவிட்டார்கள். அப்படிப் பத்திரிகையைத் திருப்பி யனுப்புவதால் அன்னார்களுக்குச் சிரமமொன்றுமில்லை. எமக்கோ சிரமம் கொஞ்சநஞ்ச மல்ல. சிரமமன்றி பண நஷ்டம். ஒரு பத்திரிகை திரும்பி வருவதால் எமக்கு 3 அணா நஷ்டமேற்படுகிறது. இப்படிப்பட்டவர்களுக்குப் பத்திரிகை கஷ்ட நஷ்டங்கள் ஒன்றும் தெரியாது.

ஏனெனில், ஒரு தேச முன்னேற்றத்திற்குப் பத்திரிகையே மூலகாரணம் என்று பன்முறை நம் போதினியில் வரைந்துள்ளோம். நமது இந்து தேசத்தில் முக்கியமாய் நமது தமிழ் நாட்டில் பத்திரிகாபிமானமே கிடையாதென்பது தெற்றெனப் புலப்படும். பத்திரிகாபிமானம் ஏற்படின் ஆயிரக்கணக்கான பத்திரிகைகள் தோன்றி நிலவவேண்டும். நமது தேசத்தில் அப்படி பத்திரிகைகள் ஓங்கவில்லை என்பது கண்கூடு. எத்தனையோ பத்திரிகைகள் தோன்றி மறைந்துவிட்டன. இதற்குக் காரணம் மேல் நாட்டில் முக்கியமாய் இங்கிலாந்து தேசத்தை எடுத்துக்கொள்ளுவோம். அது நமது தேசத்தைக் காட்டிலும் எவ்வளவோ சிறியது. அப்படி யிருந்தும் அதில் ஒவ்வொரு பத்திரிகைக்கும் லக்ஷக்கணக்கான சந்தாதாரர்களுக்கு மேற்பட்டு இருக்கிறார்கள். நமது தேசத்திலோ எந்தப் பத்திரிகைக்கும் சில ஆயிரம் சந்தாதாரர்களுக்கு மேலில்லை. மேல் நாட்டில் கை வண்டி இழுப்பவன்கூட பத்திரிகை வாசிக்கிறான். இங்கோ படித்தவனுக்குக்கூட பத்திரிகை என்றால் வெறுப்பு. இதனால் நமது தேசத்தில் பத்திரிகை வாசிப்பவர்கள் ஊக்கம் எவ்வளவு இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

நமது நாட்டில் பத்திரிகாபிமான மட்டுமன்றி தாய் பாஷாபிமானமும் சற்றேனுமில்லை. அமிழ்தினு மினிய தமிழ் மொழி பல்லாயிர வருடங்கட்கு முன்னமே உன்னத நிலையிலிருந்ததென்பதும் பூரணமானதென்றும் இலக்கிய விலக்கணங்களில் இணையற்றதென்றும் நன்கு விளங்கினும் நம்மவரில் ஆங்கிலம் கற்றவர்களில் பலர் நம் தாய்பாஷையை அலட்சியம்செய்வதோடு தமிழ் பத்திரிகைகளை வாசிப்பவர்களைக் கண்டால் "ஏன் வீணாக இத் தமிழ்ப்

பத்திரிகைகளைப் படிக்கிறீர்கள்?" என்று கூறி நம்மவர்க்கு கொஞ்ச நஞ்சமுள்ள பாஷாபிமானத்தையும் கெடுக்க முயல்கிறார்கள். தாய் பாஷையை யலட்சியம் செய்பவர்கள் தேசபக்தி உடையவர்களா யிருப்பது அரிது. ஆகையால் சஞ்சிகையின் அபிவிருத்திக்காக நாம் எவ்வளவு சிரமமெடுத்துக் கொண்டாலும் அதிகமாகாது.

நமது மாதசஞ்சிகை சென்ற வருட ஆரம்பத்திலிருந்து 56-பக்கங்களுடனும் முகப்புப் படத்துடனும் வெளிவருவது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இவ்வருடம் ஆடிமீ முதல்கொண்டு 64-பக்கங்களுடன் வெளிவரும். நமது பத்திரிகைக்கு சந்தாதாரர்களின் ஆதரணையின்றி வேறெவ்வித உதவியுமில்லை யென்பதைப் பற்றி பன்முறை வெளியிட்டிருக்கிறோம். ஆதலின் சந்தா நேயர்கள் இவ்விஷயத்தில் சரியான சிரத்தை எடுத்துக்கொண்டு ஒவ்வொருவரும் ஒவ்வொரு புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுப்பின் 'சிறு துளி பெருவெள்ளம்' என்னும் பழமொழிபோல் நமக்குச் சந்தாதாரர்கள் இப்பொழுது இருப்பவர்களைக்காட்டினும் இரண்டு மடங்கு அதிகரிப்பார்கள். அப்பொழுது பத்திரிகை இன்னும் அநேக பக்கங்களுடனும் கிளேஸ் கடிதத்திலும் பல அழகிய படங்களோடும் வெளிப்படுத்தப்படும் என்று உறுதி கூறுகிறோம்.

ஆதலின் நம் தாய்நாட்டின் முன்னேற்றத்தையும், நம் தாய் பாஷையின் அபிவிருத்தியையும் கவனித்து எல்லாச் சந்தா நேயரும் நமது கோரிக்கையை யீடேற்றுவீர்களெனப் பிரார்த்திப்பதோடு, நமது அன்பார்ந்த சந்தா நேயர்களும், விஷய தானம்புரியும் அறிஞர்களும் ஆயுள் விருத்தியும், சுகதேகமும், கவலையற்ற சந்தோஷகரமான மனமும் பெற்று நமது ஆனந்தபோதினியை ஆதரித்து வரும் வண்ணம் அருள்புரியுமாறு எல்லாம் வல்ல சச்சிதானந்தப் பரம்பொருளை மனதாரப் போற்றித் துதிப்போமாக. ஆனந்தன் வாழ்க. எல்லோரும் அவன் ஆனந்தம் பருகி அவன் ஆனந்தத்திற் றிளைப்பார்களாக.

ஓம் தத் ஸத்.

---

## கிராம நிர்மாண வேலை

தற்காலம் நமது தேசத்தில் கிராம நிர்மாண வேலையைப்பற்றிப் பேசாதாரில்லை. 'தேச சமூகம் குடிசைகளில் இருக்கிறது' என்னும் அரிய மொழி நம் நாட்டிற்கு மிக மிகப் பொருத்தமுடை

யதே. பிரிட்டன் தீவுகளைப் போன்ற நாடுகளில் கைத்தொழிற்சாலைகளும் வெளிநாட்டு வர்த்தகப் பெருக்கமும் முதலில் ஜனங்களது கவலையை இழுக்குமென்பது உண்மையாகலாம். ஏனெனில், அவ்வித தேசங்களில் கிராம வாசிகளுக்கு ஏற்பட்ட விவசாயமும் குடிசைத் தொழில்களும் மாத்திரமே சமூக முழுமைக்கும் உணவளிக்கப் போதா. தேச மகா ஜனங்களுக்குத் தேவையான உணவு முழுமையும் தேசத்திற்குள் விளையுமாறு செய்ய வசதிகளில்லை. இந்தியா, சீனா முதலிய தேசங்களோ அவ்விதமின்றித் தமக்குள்ளே சமூகத்திற்குத் தேவையான உணவுப் பொருள்களை விருத்திசெய்துகொண்டு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும் சக்தி பொருந்தப் பெற்றிருக்கின்றன. மனிதருக்கு வேண்டிய அவசியமான சாதனங்கள் அன்ன வஸ்திரங்களே. அவை நாட்டிற்குள் செய்து கொள்ளப் போதுமான சாதனங்கள் நம்மிந்தியாவில் யதேஷ்டமாக இருக்கின்றன. நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்கு அதிகமாக இந்தியர் விவசாயத்தால் ஜீவனம் செய்பவர்களே என்று சொல்லப்படுகிறது. விவசாயிகளுக்கு வருஷத்தில் ஏறக்குறைய சரி பாதி காலம் வேலையில்லாத காலமாகிறது. அப்போது அவர்களுக்கு ஏதேனும் வேறு சில்லரைத் தொழில்கள் ஏற்படலாம். பெரிய பெரிய தொழிற்சாலைகள் ஏற்பட்டு நகரவாசங்களில் காலம் கழிப்பவர்களுடைய தொகை யதிகமாகும்போது கூட இவ்விந்திய நாட்டில் கிராமவாசிகளை செம்மை வழியில் நிலைபெறச் செய்வது அறிஞர் கடமையாகவேண்டும். இதை யறிந்தே தேச பக்தர் பலரும் கிராம நிர்மாண வேலைகள் என்று கோஷிக்கத் தலைப்பட்டனர். ஆனால் 'கிராம நிர்மாண வேலைகள்' என்ற மூன்று மொழிகளுக்குள் எவ்வளவு பொருள்கள் அடங்கி யிருக்கின்றன? வேலைகளின் லட்சியமும் வழிகளும் எவை? என்பதை ஆராய்ந்தவர் மிகச் சிலரென்றே சொல்ல வேண்டியிருக்கிறது. மகாத்மா காந்தியின் கூர்ந்த அனுதாபமும் அறிவும் ராட்டினத் தொழிலை முக்கியமென்று தேசத்தினர்க்குக் காட்டின. தேசபந்து. தாஸர்தான் முதன் முதல் கிராமங்களுக்குள் புகுந்து வேலை செய்வதை விளக்கிக் காட்ட முயன்றார். குடிசைத் தொழில்கள் முன்னேற்றமடைய தலைவர்கள் எப்போதும் முயற்சி யெடுக்க வேண்டுமென்பது அப் பெரியாரது கொள்கை. அவர் இதுவரையில் ஜீவித்திருக்க தேச மாதா கொடுத்து வைக்கவில்லை.

அரசாங்கத்தார் முதல் காங்கிரஸ் தலைவர் வரையில் எல்லோரும் ஒரு விஷயத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். தற்கால உலகில்

எத்தேசத்தவரும் அவசியம் கவனிக்கத்தக்க விஷயம் அது. உல கெங்கும் ஜன சமூகங்கள் கல்விப் பயிற்சி பெற்றிருக்க வேண்டிய தவசியம் என்பதை மறுப்பவர் இக்காலத்தில் இல்லை. ஆகவே பாமர ஜனக்கல்வி தேசமெங்கும் வியாபகமடையச் செய்வதே சிறந்த தேசத்தொண்டு என்பது இக்காலத்து உத்தம அறம். ஒரு தேசம் முன்னேற்றமடைய வேண்டுமானால் முதலில் ஜனசமூகம் அன்ன வஸ்திரத்திற்குக் குறைவின்றி வாழவேண்டும். அன்னமும் வஸ்திர மும் சகலருக்கும் அவசியம் வேண்டிய இரண்டு வஸ்துக்கள். தேச த்து மக்களுள் ' ஒரு தனி மனிதனுக்கு உணவில்லை யெனில் ' அதற் காக 'ஜகத்தினை யழித்திடுவோம்' என்ற ஒப்பற்ற விதி செய்ய வேண்டுமாறு கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடி யிருப்பதன் கருத்து கவனிக்கத்தக்கது. முப்பத்து முக்கோடி இந்தியர்க்கும் போதுமான அளவு தேசத்திற்குள் உணவு காப்பாற்றப்பட வேண் டும். இதற்கு அடுத்தபடியாக வஸ்திர முடுக்க ஏழைகளெல்லோருக் கும் வசதி ஏற்படவேண்டும். உலகில் மானிடராகப் பிறந்த எல் லார்க்கும் இவ்விரண்டும் அத்யாவசியம். இந்த இரண்டிற்கும் கிரா மங்களே இயற்கையாக ஏற்பட்ட ஸ்தலங்களென்று சொல்லமுடி யும். விவசாயத் தொழில் தேச மக்களுக்கு உணவூட்ட இன்றி யமையாதது. அம்மாதிரியே நூற்றலும் நெசவுமாகும். இவைகள் நம் நாட்டில் எப்போதும் கிராமங்களில் மாத்திரமே நடை பெற்று வந்தன. உலகில் மேன்மையடைந்து மற்ற தேசங்களால் மதிக்கப் படுவதற்கு வெவ்வேறு துறையில் ஏற்படும் பயிற்சிகள் அவசியமே யாயினும் ஜீவாதாரமான மேலே சொல்லப்பட்ட இரண்டும் இல்லா மல் ஜீவிப்பதும் கஷ்டம். ஆதலால் கிராமங்களில் வசிப்பவர் இந்த இரண்டு தொழில்களிலும் தேசம் சிறப்பு பெறுமாறு செய்யவேண் டியதவசியமாகிறது. பூமியில் ஏற்படும் விவசாயத் தொழிலபிவிர்த் திக்குப் பயிரிடுவது கால்நடை வளர்த்துப் பெருக்குதல் தோட்டப் பயிர் முதலிய பல கிளைகளுண்டு. இவைகளில் கிராம ஜன சமூகத் தவர்க்குத் திறமான அறிவு ஏற்படவேண்டும். இதற்காகக் கிராமக் கல்வி யபிவிர்த்தியில் கருத்துச் செலுத்துவோர் பாட திட்டங்களைத் தக்கபடி யேற்படுத்துவது அவசியம்.

இப்போது நாம் கல்வியைப்பற்றிப் பேசாவிட்டாலும் சில குறிப்புகளை நிர்மாண திட்ட சம்பந்தமாக இங்குக் காணலாம். தற் காலம் கிராமக் கல்விச்சாலைகளில் எழுதவும் படிக்கவும் மாத்திரமே

கற்பித்து வருகிறார்கள். அதில் பிள்ளைகளை அனுப்பும் பெற்றோர் தம் மக்கள் மேல் படிப்புக்குப் பட்டணங்களுக்குச் செல்ல வேண்டி யிருந்தால் மாத்திரமே அதிக கவனம் செலுத்துகிறார் கள். மேல் படிப்பும் உத்தியோக மேற்கும் எண்ணத்துடன் அடையப்படுகிறது. வரவா படித்த வகுப்பினர்க்கு உத்தியோகங் கள் கிடைப்பது கஷ்டமாகிவிடவே, கிராமவாசிகளுக்குப் படிப்பில் ருசியேற்படாமற் போகிறது. படிப்பென்பது உத்தியோக மேற் பது—சிறு சம்பளமுள்ள குமாஸ்தா வேலைகளும்கூட—என்ற ஒரு காரியத்தைத் தவிர வேறு எதற்கும் உபயோக மில்லாமலிருக்கும் வரையில், ஜனசமூகம் அதை இனி அலட்சியம் செய்ய நேரிடும். யாதாவதொரு பயனை அபேட்சித்தே எவரும் ஒரு காரியத்திலிறங்க முடியும். இதுமானிட இயற்கை. தேசிய பொதுநோக்குக் கொண்டு பார்ப்போமாயின் தற்கால கல்விச்சாலைகள் தேசமுன்னேற்ற துறை களுக்கு தேவையான கல்வியைச் சிறிதளவும் கொடுக்கவில்லை. தேசத்து வளம் பெருக்கக்கூடிய துறைகளே தேசபக்தியுடையோர் களின் கவனத்தை இழுக்கவேண்டும். நம் தேசத்திற்கு அடிப் படையாக உள்ள இடம் கிராமங்களே யாதலால் கிராமக்கல்விச்சாலை களில் அந்தந்த இடங்களுக்குத் தக்கவாறு விவசாயக் கல்வியும் குடிசைத் தொழிற்கல்விகளும் அவசியமாக ஏற்படுத்திவிட வேண் டும். அப்போது பள்ளிக்குச்சென்று சில வருஷங்கள் படித்தவன் கிராமத்திற்குள்ளேயே மற்றவர்களைவிட அதிகம் பயனடையலாம். இவ்விதமாக அனுபவத்தில் எல்லோர் கண்களுக்கும் தோன்றுமாறு பயன் விளைவதானால் இப்போதுள்ள அசிரத்தை கிராமவாசிகளுக்கு படிப்பில் ஏற்பட நியாயமில்லை. இனும் கல்வியும் கட்டாயக் கல்வி யும் ஏற்பட்டால் அப்போது ஜனங்களுக்கு அதிருப்தி யேற்படாது. இப்போதுள்ள கல்வி முறையில் கட்டாயமுறை ஸ்தாபிக்கப்பட்டால் கிராமவாசிகள் அனைவரும் எதிர்க்கத் தொடங்குவார்கள். பயன் இல்லாத கல்வியைக் கட்டாயப் படுத்துவதும் அதர்மம். அறிவு வளர்ச்சி மாத்திரமே ஏற்படுவதை எல்லோருக்கும் புகட்டவேண்டிய தில்லை. வயிறு பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான ஜனங் களுக்கு உலக அறிவுவந்து யாதுபயன்? பசிநீங்க, விவசாய வரு மானம் கல்வியால் அதிகரிக்குமென்று காட்டினால் கட்டாய மென்ப தின்றியே நம்நாட்டு ஜனங்கள்—ஆதிதிராவிடர் உள்பட எல்லோ ரும்—கல்விச்சாலைகளுக்குள் கூடுவார்கள். ஆகவே கிராம நிர்மாண வேலையில் இந்தத் திட்டம் அறிஞர்களது முதற்கடனாக வேண்டும்.

கிராம ஜனங்களுக்குள் விவசாயமும் கைவுத்தொழிலும் திறம் பெற விருத்தியாகும்படியான கல்வியைப்பற்றிப் பெரிதாக இவ்வளவு தூரம் கூறியது அதன் அவசியத்தை முன்னிட்டேயன்றி வேறல்ல. பிறகு நம் நாட்டில் இன்னும் முற்றிலும் அழிக்கப்படாத பிரபல தொழில்கள் பல கிராமங்களிலும் உண்டு. கயிறு பின்னல் முதல் தச்சு, கொல்லுவேலை வரையிலும், பாத்திரங்கள் செய்யும் தொழில் போன்ற பல தொழில்களும் ஆங்காங்கு இப்போதும் காணலாம். அவ்வித தொழிலில் தற்காலம் தங்கியிருக்கும் பாமரர் தொழிலபி விர்த்தி செய்யவழி தெரியாமல் தவிக்கிறார்கள். 'சோம்பேறியின் மூளையில் சாத்தான் குடிகொள்வான்' என்று ஒரு ஆங்கிலப் பழமொழி உண்டு. அதுபோல் தம் தொழிலை வளர்த்துப் பிழைக்க வழி தெரியாமல் வசிக்கும் இவர்கள் பல தீய வழக்கங்களுக்கும் ஆட்களாகின்றனர். ஆதலால் கிராமச் செழுமையில் கருத்துச் செலுத்துபவர் இவ்வித தொழிலாளருக்குத் தக்கவழிகாட்டி அவர் களுடைய தொழிலை வளர்த்துப் பொருள்களை விற்பனைசெய்ய மார்க் கட்டுகளும் தேடிக்கொடுக்கவேண்டும். ஒரு தாலூக்கா தலைமை ஸ்தானத்தில் வெண்கல பாத்திரம் செய்வதில் அதிமேதாவியான ஒரு தொழிலாளி சில வருஷங்களுக்கு முன் இருந்தான். அவன் செய் யும் வேலைப்பாட்டைக்கண்டு அதிசயித்து அவன் செய்த பாத் திரத்தை எவரும் வாங்க விரும்புவது வழக்கம். ஆனால் நாம் முன் கூறியபடி சாத்தான் குடிகொண்ட மனத்தவன் ஒரு கூஜா செய்ய மாதக்கணக்காகும். கொடுத்த பணமும் செலவாகிவிடும். இதனால் அவனிடம் எவரும் வேலைகொடுப்பதில்லை. அவனுக்கும் முதல் போட்டு செய்யத் தனமில்லை. ஆதலால் தொழில் கெட்டுவிட்டது. இவ்வித தொழில்உள்ள கிராமங்கள் இப்போதுகூட கேட்பாரின்றி யிருப்பதால் தொழில் நாசமடைந்து வருகிறது. அவ்வளவுக் கவ்வளவு அந்நியதேச சாமான்கள் தேசத்திற்குள் புகுந்து கொள் கின்றன. தேசபக்தி பெருகிய பேரருளாளர் இவ்வித கிராமங்களில் கூட்டுறவு முறைகளால் மூலதனம் உண்டாக்கித் தொழிலாளரை அழைத்து அவர்களுக்குத் தக்ககூலிகொடுத்துப் பொருளும் வேலையும் கொடுப்பதுடன் சாமான்களை விற்குமிடமும் அவர்களுக்குத் தேடிக் கொடுக்கவேண்டும். இதற்குக்கூட்டுறவு ஸ்தாபனங்கள் கிராமங்களில் அதிகம்பரவுமாறு செய்தல் வேண்டும். விவசாய சம்பந்தமான பல சில்லரைத் தொழில்களுக்கும் கூட்டுறவு முறைகள் பயனளிக்கும். இதுவும் கிராம நிர்மாண வேலையிலடங்கும். பொது ஸ்தலங்கள் ஒவ்

வொரு கிராமத்திற்கும் உண்டு. இப்போதுகூட கிராமப் பொதுவடைகளென்று பல ஸ்தலங்கள் எல்லாக் கிராமங்களுக்கும் உண்டு. ஆதியில், சமுதாய வாழ்க்கையாக கிராமங்கள் அமைந்தபோது பொதுகாரியங்களைச் செய்பவர்க்கு உபயோகமாகவும் மற்றும் கோயில், குளம், வடிகால், ரஸ்தா முதலிய வசதிகளுக்காகவும் இந்தச் சொத்துக்கள் உபயோகப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இந்த ஸ்தலங்களையும் தற்கால நிலைக்கேற்றபடி உபயோகிக்க கிராமத்தார் பஞ்சாயத்துக்கள் மூலமாக வேலைசெய்யலாம். இதுவும் கிராம நிர்மாண திட்டத்திலடங்கும். இவ்விதம் பஞ்சாயத்துக்கள் மூலமாகவும் கல்விச்சாலைகளை முற்றிலும் மாற்றி ஜன சமூகத்திற்கு உபயோகமான முறையில் நடத்துவதாலும் கூட்டுறவு இயக்கத்தை உபயோகப்படுத்திக் கொண்டு விவசாயம் தொழில் முதலியவற்றை வளர்த்து சுதேசி தர்மத்தை ஆதரிப்பதன் மூலமாகவும் எவ்வளவோ வேலைகள் கிராமங்களில் செய்யமுடியும். இவற்றால் நாட்டில் கூட்டுறவு, ஒற்றுமை, பொதுதர்மஅறிவு, தேசபக்தி முதலியவை பெருகித் தேசம் செழித்துச் சிறப்புப்பெறும். இதைக் கவனிக்கும் தேசத்தலைவர்கள் தமிழ்நாட்டில் உளரோ?

# ஆனந்தபோதினி வாழ்த்து.



வாலாஜா நகர் முனிசிபல் உயர்தரப் பாடசாலையில்
தலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்த
**ஆ. கமலநாத முதலியாரால் இயற்றப்பட்டன.**

சிந்துரமுகத்தோன் சீரடிப்போதைச் சிந்தையிற் சந்ததங்கொண்ட
அந்தமில் புகழானந்த போதினியி லார்ந்த மூதறிஞர் முன்னோர்
தந்தமா சரிதங் காதைகாவியங்கள் தரணியிலென்றும் வாழ்ந்திடுக
கந்தன்மால் பிரமன் கண்ணுத லிவரைக் கருத்தினிலுன்னி
[யேத்துதுமே.

சாரதிபாதப் போதையானந்தபோதினி சற்குணர் வழுத்திப்
பாரகாவியமும் பற்பல நூலும் பரிவுட னச்சினிற்பதிப்பார்
வாரசஞ்சிகையும் மாதசஞ்சிகையும் வயங்குநற் செய்தி
[கண்முன்னு
ஆர ஆனந்தபோதினி யென்றும் அவனியிலோங்கி வாழ்குகவே.

திங்கள்சேர் சடையானருளி லானந்த போதினிச் சீருடன் வாழ்க
பொங்குமா புகழானந்தபோதினிபோற் புவிதனி லொன்றை
[யுங் காணேம்
தங்குமா முனிசாமிப்பெயருடைய சற்குணன் குவலயந் தன்னில்
இங்கிதமான மனைவியு மக்களென்றுமே நிலைத்து வாழ்குகவே.

பன்னிய பதினேழாண்டுகள் சிறக்கப் பாவலர்போற்றிட வளரும்
மன்னு மானந்தபோதினி வாழ்க மன்னவர் மாதவர் வாழ்க
துன்னுசீர் தமிழா மன்னையும் வாழ்க தோமிலாவகத்தியன் வாழ்க
கொன்னுசீர் சென்னை நகரெல்லாம் வாழ்க குவலயம் மிக்கு
[வாழ்குகவே.

## உலக சுபா சுபம்

### ஆடிமாதப் பிறப்பு.

(பாலசோதிட வித்வ ஸ்ரீமான் வ. து. வேலு நாயகர்.

சுக்கிலஸு ஆடிமீ விசாகநட்சத்திரத்திற் பிறக்கின்றது. மாதம் சோம வாரம் இரவு 44 நாழிகை 25 விநாடி அளவில் பிறத்தலின் அன்று தசமி திதியின் பூர்வார்த்த கரணம் தைதுலம் நா. 45-35 ஆகவே சங்கிரமணகால வாரம் திங்கள், கரணம் தைதுலம், இதன்பலன்:—

| | | |
|---|---|---|
| ஜாதி | பிதுர்தேவதை | ஜனபீடை |
| பெயர் | துவாங்கிசி | வைசியசுகம் |
| ஸ்நாநம் | பால் | பசுகளுக்குப்பீடை |
| ஆடை | மஞ்சள் | சுகவிருத்தி |
| திலகம் | நாகரத்னம் | சர்ப்பங்கள் நாசம் |
| மாலை | மல்லிகை | தாசிகளுக்குப்பீடை |
| அணி | நீலம் | ஜனபீடை |
| பாத்திரம் | மண் | பயிர் அழிவு |
| போஜனம் | அப்பம் | வசூரி பயம் [பீடை |
| வாகனம் | கழுதை | வியாதி; வைசியருக்குப் |
| ஆயுதம் | சஸ்திரம் | அதிகபயம் |
| குடை | சுவேதம் | ஜனசௌக்யம் |
| வாத்தியம் | தாளம் | உலக க்ஷேமம் |
| முகம் | வைராக்யம் | இராஜபீடை |
| சாமரம் | வெள்ளி | சுபீக்ஷம் |
| வளர்பிறை | | சுபீக்ஷம் |
| திங்கள் [திரி | | சுபீக்ஷம் |
| அர்த்த இராத் | | இராக்ஷஸசுகம் |
| இலக்கினம் | மீனம் | சுபீக்ஷம் |
| திக்கு | உத்திரம் | வடதிக்கில் க்ஷாமம் |

தக்ஷணாயன காலத்திய ஆரம்ப சங்கிரமண பலன் இதுவாகும். புனர் பூசம் விசாகம் பூரட்டாதி ஆகிய இந்த நக்ஷத்திரங்களில் பிறந்தவர்கள் இம் மாதம் ஜந்ம வாரத்தில் சாந்தி, விரதாநுஷ்டானம் செய்து கொள்ளல் நலம்.

## மாதப் பலன்

| | |
|---|---|
| உத்ரா-பர-மக-நோய் | பூட்-திரு-சித்-அனு-ஆதாயம் |
| திருவோ-கிரு-பூர-ஆதாயம் | உட்-புன-சுவா-கேட்-செல்வம் |
| அவி-ரோக-உத்ர-செலவு | ரேவ-பூச-விசா-மூலம்-செலவு |
| சதய-மிரு-அஸ்-நஷ்டம் | அசு-ஆயி-பூரா-......-துன்பம் |

இந்த ஆடிமாதப் பிறப்பின் நிலைமையைக்கொண்டு ஷை நட்சத்திரங்களில் பிறந்தவர்கட்கு, மேற்கண்டபடி நன்மை தீமைகள் உண்டாகும். ஆதலால் மக்கள் இதனை யுணர்ந்து தமது நட்சத்திரப்பலனை அறிந்து கொள்வார்களாக.

இம்மாதம் மேற்கிலிருந்து காற்று பலமாக வீசும், மண் காற்றடிக்கும், 12 தினம் வானத்தில் மேகங்கள் பறந்துகொண் டிருக்கும், மின்னல் இடி 9-க்கு மேலுண்டாகும். 7 தினங்களில் 4 சுழிமழைப் பெய்யும், சூரிய சந்திரர்களைச் சூழ்ந்து விவிதவர்ணங்களுடன் கூடிய பரிவேஷங்கள் காணப் படும். புன்செய் சாகுபடிகள் சர்வ சாதாரணமாக இருக்கும். மழை கண்ட விருஷ்டியாக இருக்கும், ஆனால் சிற்சில விடங்களில் ஏரிகுளங்கள் நிறைந்து இருக்கும். அகவிலையாக இருக்கும், ஆடு மாடு முதலிய ஜந்துக்களுக்குப் புல் பூண்டு கஷ்டமும், வியாதியுமுண்டாகும். ஆடிமாதம் முதல் தேதி சூரிய உதயத்தின்போது சூரிய மண்டலம் மேக படலங்களால் சிறிது நேரம் வரை மறைக்கப்பட்டு பின்பு பிரகாசிக்குமானால் நல்ல சுபிட்சமுண்டாம். "ஆடிமுதற் றெய்தி ஆயிரங்கண்ணுடையோன், மூடி முகந்திறந்தால் நாடு செய்த நன்மை" என்பது பெரியார் திருவாக்காகும். ஆடிமீ 7௳ திங் கட்கிழமை சூரியோதயகாலம் உத்திராட வியாபக மிருத்தலின் அதுபோது

| | | | |
|---|---|---|---|
| கீழ்க்காற்றுயின் | பின்மழை | மேற்கு | நல்லமழை |
| தென்கிழக்கு | பஞ்சம் | வடமேற்கு | விட்டில் புழுவுண்டு |
| தெற்கு | பஞ்சம் | வடக்கு | நல்லமழை |
| தென்மேற்கு | விளைவில்லை | வடகிழக்கு | முன்மழை |

இப்படியாகப் பலனுண்டாகும். ஆடிமீ 5௳ சனிவாரமான படியால் பயிர் நாசமுண்டாம். இம்மாதம் நட்சத்திரம் உதிருமாயின் தானியக்குறை வாகும். வளர்பிறை பஞ்சமி வெள்ளிக்கிழமை வருதலின் பெருமழையுண் டாம். 8௳ மழை பெய்யின் க்ஷேமம் நன்மழை யுண்டாம். 17௳ வியாழத் தன்று கிருஷ்ணபக்ஷ ஏகாதசி ரோகணியன்று அஸ்தமனவேளையில் பொழுது கட்டினுல் நல்லமழை பெய்யும். சந்திரனது மூன்றும் பிறை வட கோடுயர்ந்தால் உலகக்ஷேம முண்டாம் "வடகோடுயர்ந்தென்ன தென் கோடுயர்ந்தென்ன வான்பிறைக்கே" என்றார் முற்றத்துறந்த பட்டினத் தடிகளும் ஒரு காலத்தில் என்க. கிழக்குத் திக்கில் இந்திர வில் (இந்திர

தனுசு) உண்டாயின் உலகத்தில் பஞ்ச முண்டாகும். ஆடிமீ 6வ ஞாயிற்றுக்கிழமை பௌர்ணமியன்று பகலில் சந்திரனை:— 10 நாழிகைவரை பரிவேட மிட்டால் ஐப்பசிமாதத்திலேயும், 20 நாழிகைவரை பரிவேட மிட்டால் கார்த்திகை மாதத்திலேயும், 30 நாழிகைவரை பரிவேடமிட்டால் மார்கழிமாதத்திலேயும், இரவு முழுதும் பரிவேடமிட்டால் கூறிய மூன்று மாதங்களிலேயும் அடைமழை பெய்யுமென்பதாம்.

> யாமளோக்த ப்ரகாரேண கணிதாகத ஸாரத꞉
> அர்க்ககாண்டோக்த விதிவத்கணிதாகத ஸங்க்யயா
> ஸமசூன்யாத் யர்கஸம்ஜ்ஞா꞉ வஸ்தூநாமாதி நிர்ணயேத்

எனவரும் உருத்திரயாமளாந் தர்க்கத சம்வத்ஸர பத்ததியின்படி இம்மாத சங்கராந்தி துருவம்(99) க்கு (தசமிதிதி 10, திங்கட்கிழமை 15, விசாக நட்சத்திரம் 24,சுபநாம யோகம் 25, கற்கடக சங்கிரமணம் 25 ஆக 99) தானியாதிகளின் விலை வருமாறு:—இம்மாதம் கோதுமை, பச்சைப்பயறு, நெல், அரிசி, நெய், வஸ்திரம் இவைகள் அகவிலையாகவும், கடலை, துவரை, எண்ணெய், வெல்லம், சர்க்கரை, தேங்காய், பருத்திப்பஞ்சு, நூல் சுகவிலையாகவும், கற்கண்டு, பாக்கு, சமவிலையாகவும் விற்கும்.

> வெள்ளியு முன்செல்ல வெங்கதிரோன் பின்செல்ல
> தள்ளியேயங் காரகனுந் தாழ்ந்துவர—உள்ளபடி
> பள்ளம் பயிர்செய்ய வேண்டாங்காண் பாருலகீர்
> வெள்ளம் பெரிதாய் வரும். (பழம் பாடல்)

என்றபடி கிரகங்களில் மழைக்கோளாகிய சுக்கிரனுடையவும், மழையின்மைக்குக் காரணபூதனான செவ்வாயினுடையவும், கிரகநாயகனான சூரியனுடையவும் சலனம் (நடை) இன்றி இதற்குமாறாக இருத்தலினால்:—

> காய்ச்சின வெய்யோன் சேயோன் முன்செலக் கதிர்கால்
> வெள்ளித்தேசிகன் பின்புசென்று நடக்குமிச் செயலான் முந்நீர்த்
> தூசினவுலகிற் பன்னீராண்டுவான் சுருங்குமென்று
> பேசினநூல்கள் மாரி பெய்விப்போன்சென்று கேண்மின்.
> (திருவிளையாடற் புராணம்.)

என்றபடி முன்னேகூறிய கிரகங்களின் நடையிருத்தலின் மழையின்மைக்குக் காரணமெனக் கண்டுணரப் பெறுதலின் மக்கள் தெய்வ வழிபாடு, வருண ஜப முதலியன செய்து நன்மையைப் பெறுதல் மிக மிக அவசியமாகும். சுபம்.

---





# வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(636-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

## சமாதி லட்சணம்.

**சீடன்:**—ஸ்வாமி! சமாதியாவதென்ன?

**குரு:**—(விஷய வடிவமாகவுள்ள எல்லா விருத்திகளையும் விட்டு 'நானே பிரஹ்மம் பிரஹ்மமே நான்' என்று தன் நிஜ நிலையில் அசைவற்றிருத்தல் சமாதி எனப்படும்.) இந்தச் சமாதி சவிகற்ப சமாதி நிர்விகற்ப சமாதி என இருவகைப்படும்.

(1) சவிகற்ப சமாதி:—ஞாதுரு ஞான ஞேயமென்னும் திரிபுடித் தோற்றத்தோடு அத்விதீயப் பிரஹ்மத்தில் அந்தக்கரணவிருத்தி நிலைத்திருத்தல் சவிகற்ப சமாதியாம். உதாரணமாக:—மண்ணினுல் செய்யப்பட்ட பானையைக் கண்டு இது மண்ணேயென்றுணர்ந்த விடத்தும் மண் பானை காணப்பட்டுக்கொண்டிருத்தல் போல, சவிகற்ப சமாதியில் சன்மாத்திர மாகிய ஆத்ம சொரூபம் காணப்படினும் சத்ரூபமாகிய திரிபுடியும் காணப் பட்டுக்கொண்டிருக்கும்.

(சுத்த திரிபுடி யென்றும் அசுத்த திரிபுடி யென்றும் திரிபுடி இரு வகைப்படும். தேகமே நான் என்பது அசுத்த ஞாதுரு (காண்பான்), அறிவே நானென்பது சுத்த ஞாதுரு; இந்த ஞாதுரு புத்தி விருத்தியோடு கூடி ஞானேந்திரிய வாயிலாகக் காணப்படும் பொருள்களில் இது விருப் புடையது, இது வெறுப்புடையது என்றறியின் அது அசுத்த ஞானம் (காட்சி). அவ்வசுத்த ஞானத்தைப் பொய்யென்றறிந்ததே சுத்த ஞானம். பூதங்கள் தடித்துப் பௌதிகங்களாய் எதிரே சப்தாதி விஷயங்களாகத் தோற்றுவது அசுத்த ஞேயம் (காணப்படும் பொருள்). சப்தாதி விஷயங் களெங்கும் சொரூபாகாரமாய்த் தோன்றுவது சுத்த ஞேயம். ஆகவே, இச் சவிகற்ப சமாதியிலுள்ள திரிபுடி சுத்த திரிபுடி என்றறிக.) இதனுல்,

(அசுத்த திரிபுடி லயமாகி) சுத்த திரிபுடி லயமாகாமல் அத்துவிதீயப் பிரஹ்மத்தில் அந்தக்கரண விருத்தி நிலைத்திருப்பது சவிகற்ப சமாதியாம் என்றறிக.

(2) நிர்விகற்ப சமாதி:—காண்பான் முதலிய திரிபுடியை விட்டு மன மானது திடமாக காணப்படும் பொருளினிடத்து (ஞேயத்தில்) நிலைத்து நிற்றலே யோகமென்னும் பெயருடைய நிர்விகற்ப சமாதி யெனப்படும். உதாரணமாக, அப்பில் (நீரில்) போடப்பட்ட உப்பு வேறாகக் காணப்படா மல் நீராகவே காணப்படுதல் போல, பிரஹ்மாகாரத்தை யடைந்த விருத்தி பிரஹ்ம மாத்திரமாகவே யுள்ளதாய் வேறாகப் பிரகாசியாமல் அத்துவிதீய பிரஹ்மமாகவே விளங்கும். இதுவே நிர்விகற்ப சமாதியாம். ஞாதுரு முத லிய கற்பனைகளில்லாமையின் இது நிர்விகற்ப சமாதி எனப்படுகிறது. ஆகவே, சவிகற்ப சமாதிக்கும் நிர்விகற்ப சமாதிக்கும் பேதம் யாதெனின்:—

சித்த விருத்தி லயமாகாதிருப்பது சவிகற்ப மென்றும் லயமடைந்திருப்பது நிர்விகற்ப மென்றுமறிக.

சீடன்:—சுவாமி! மனோவிருத்தி லயமடைவது சமாதி யென்றால் அதே நிலையினை யுடையதாகிய நித்திரைக்கும் இதற்கும் (சமாதிக்கும்) பேத மென்ன?

குரு:—சமாதியில் ஞானமிருக்கும்; நித்திரையில் அஞ்ஞானமிருக்கும். இதுவே பேதம். பிரிய சீடனே! பிரபஞ்சம் முதலிய விபரீத பாவங்கள் நிவிர்த்தியாகும் பொருட்டு மோக்ஷ விருப்புள்ளவன் இவ்விருவகைச் சமாதிகளையும் பிரயத்தின பூர்வகமாகச் செய்தல் வேண்டும். இச் சமாதியை அப்பியசிப்பதனால் ஆத்ம பாவத்திற்கு மாறான தேகேந்திரியாதி பாவம் நிவிர்த்தியாதலும், ஞானத்திற்குப் பிரதிபந்தமான ஆவரணம் நசித்து ஞானம் விளங்குதலும் பிரஹ்மானந்தமும் உண்டாம். இவையே சமாதியின் பலமாம். மேற்கூறிய சமாதிகளிரண்டனுள் முதலாவதாகிய சவிகற்ப சமாதியும் திருசியாநுவித்தம் சப்தாநுவித்தம் என இருவகைப்படும். இவற்றுள்,

(1) திருசியாநுவித்த சவிகற்ப சமாதி:—திருசியங்களாகிய காமக்குரோதாதிகளுடன் சம்பந்தம் எதில் உண்டாயிருக்குமோ அது திருசியாநுவித்த சமாதியாம். நான் எனது என்னும் காமக்குரோதாதி விருத்திகள் எவனால் பார்க்கப்படுமோ அகங்காராதிகளும் எந்த ஆத்மாவினால் பார்க்கப்படுமோ அவை திருசியங்களாம்.

நிஷ்கிரியனாகிய எந்த ஆத்மா அத்திருசியங்களைப் பார்க்கின்றானோ அத்தகைய தன்னை காமமாதிய சகல விருத்திகளுக்கும் திருஷ்டாவாகவும் நிர்விகாரனாயும் சாட்சி மாத்திரனாயும் அறிதல் வேண்டும். காமாதி விருத்திகள் என்னால் பார்க்கப்படுகின்றமையின் நான் அக்காமம் முதலிய விருத்திகளுக்கு சாட்சியாம் என்று தன்னைச் சாட்சி மாத்திரனாய்த் தெளிந்துகொண்டு திருசியமாகிய (பார்க்கப்படுகிற) காமம் முதலாகிய சகலமும் சாட்சி பூதனாகிய தன்னிடத்தே லயமாகும்படி செய்தல் வேண்டும்.

நான் தேகமன்று, பிராணமன்று, இந்திரிய வர்க்கமுமன்று, அகங்காரமன்று, மனமன்று, புத்தியன்று, தேகேந்திரியாதிகளுக்கும் அவற்றின் காரியங்களுக்கும் சாட்சி பூதனும் நித்தியனுமாகிய அந்தராத்மாவே நான். நான் வாக்கிந்திரியத்திற்கும் சாட்சி, பிராண சஞ்சாரத்திற்கும் சாட்சி, புத்திக்கும் சாட்சி, மனோ விருத்திக்கும் சாட்சி, கண் காது முதலிய இந்திரியங்களுக்கும் சாட்சி. ஆகலின் சாட்சி பூதனும் நித்தியனுமாகிய அந்தராத்மாவே நான். நான் தூலரூபனுமல்ல, நான் சூக்கும ரூபனுமல்ல, நான் பாலனுமல்ல, நான் வாலிபனுமல்ல, நான் விருத்தனுமல்ல, நான் குருடனுமல்ல, நான் ஊமையுமல்ல, நான் நபும்சகனுமல்ல, சாட்சிமாத்திரனும் நித்தியனுமாகிய அந்தராத்மாவே நான். நான் வருகிறவனுமல்ல, நான் போகிறவனுமல்ல, நான் கொல்லுகிறவனுமல்ல, நான் செய்கிறவனுமல்ல, நான் பிரயோகஞ் செய்கிறவனுமல்ல, நான் சொல்லுகிறவனுமல்ல, நான் புசிக்கிறவனுமல்ல, நான் சுகியுமல்ல, நான் துக்கியுமல்ல, சாட்சி மாத்திரனும் நித்தியனுமாகிய அந்தராத்மாவே நான். நான் கூடுகிறவனுமல்ல, நான் பிரிகிறவனுமல்ல, நான் காமியுமல்ல, நான் குரோதமுடையவனுமல்ல, நான் ராகமுடையவனுமல்ல, நான் லோபமுடையவனுமல்ல, நான் பயமுடைய

வனுமல்ல, நான் யோகமுடையவனுமல்ல, நான் முக்தனுமல்ல, சாட்சி பூதனும் நித்தியனுமாகிய அந்தராத்மாவே நான். நான் உள் பிரக்ஞை யுடையவனுமல்ல, நான் வெளிப் பிரக்ஞை யுடையவனுமல்ல, பிரக்ஞை யுடையவனுமல்ல, பிரக்ஞை யில்லாதவனுமல்ல. மேலும், நான் சிரவணம் செய்பவனுமல்ல, மனனம் செய்பவனுமல்ல, தெரிந்து கொள்பவனுமல்ல, ஞானரூபனும் சாட்சி மாத்திரனுமாகிய அந்தராத்மாவே நான். எனக்குத் தேகம் இந்திரியம் புத்தி இவற்றின் கூட்டுறவுமில்லை, எனக்குப் புண்ணியமு மில்லை, பாவமுமில்லை, பசி தாகம் முதலியவைகளில்லாதவனும் நித்திய முக்தனும் சின்மாத்திரனுமாகிய அந்தராத்மாவே நான். நான் கால் கைக ளில்லாதவன், நான் வாக்கில்லாதவன், கண்களில்லாதவன், பிராணனற்ற வன், மனோரஹிதனும் புத்திரஹிதனுமாவேன். ஆகாசம் போல் நிறைந் திருப்பவனுமாவேன், நிர்மலனுமாவேன். எப்பொழுதும் ஒரே விதமாயிருப் பவன். கேவலம் சின்மாத்திரனே நான்.

உத்தம மாணவா! பண்டிதனானவன் இவ்வாறு தனது சொரூபத்தைக் காண்கிறவனாய் எப்பொழுதும் காணப்படுகிற திருசியத்தை லயமாக்கிக் கொண்டு, பிராந்தி வசத்தால் காணப்படும் சர்வ சித்தமான ஆத்மாவின் விபரீத பாவனையை விடுகிறான். இப்படி ஆத்மாவின் விபரீத பாவம் காணப்படாமையே முக்தியென்று மொழியப்படும். அந்த விபரீத ஆத்ம பாவனை காணப்படாமை (ஆத்மாவின் நிஜ சொரூபம் காணப்படுதல்) சமாதி நிஷ்டாபரனுக்குச் சித்திக்குமின்றி அன்னியனுக்குச் சித்தியாது. மோக்ஷம் வேஷத்தாலும் பாஷையாலும் கிட்டாது. மோக்ஷமென்றால் கேவலம் அகண்டமான சிற்ரூபத்தோடிருத்தலாம். அது எய்தும்பொருட்டு மனிதன் தன் வடிவத்தையே பாவித்துக்கொண்டு, சரீரமே தானென்றே னும் சரீரம் தனதென்றேனும் எண்ணலாகாது. ஆத்ம சொரூபத்தைப் பாவித்துக்கொண்டு அவித்தையை நசிக்கச் செய்தல் வேண்டும். அதனா லேயே முக்தனாவனன்றி வேறொன்றால் எத்தனைக் கர்மங்களினாலும் முக்தி யடையமாட்டான். அந்தராத்மாவைத் தெரிந்துகொண்டால் எல்லாப் பந்தங்களும் நசிக்கும். 'கிலேசங்கள் நசித்தால் ஜனனமரணங்கள் நசிக்கும்' என்று வேதம் கூறுகின்றது. மோட்சமென்பது பிறவியில்லாமையே யாகும். பிறவியில்லாமை எதனால் உண்டாகுமெனின்: கிலேசம் நசித்தால் தான் உண்டாகும். கிலேசம் எங்ஙனம் நசிக்குமெனின்: அதற்கு ஆத்ம நிஷ்டையே காரணம். ஆகையால் முமுட்சுவானவன் (மோட்ச விருப்புள்ளவன்) ஆத்ம சொரூபத்தையே பாவித்துக்கொண்டிருத்தல் வேண்டும்.

பிரபஞ்ச வாசனைகளே கிலேசங்க ளெனப்படும். அவையே பிராணி களின் ஜன்மாதிகளுக்குக் காரணமாம். அவற்றை ஞான நிஷ்டை யென் னும் அக்கினியால் எரித்தால் அவற்றில் பிறப்புண்டாகுந் தன்மை யுண்டா காது. அக்கினியால் சுடப்பட்ட விதைகள் மீண்டும் முளைத்தவில்லை; அப்படியே ஞானக்கினியால் வாசனைகள் தகிக்கப்படுவதனால் அவ்வாசனை மறுபடியும் ஆத்மாவோடு சேர்ந்து புனர் ஜன்மத்தை யுண்டாக்கமாட்டா. ஆகையால் முமுட்சுவானவன் வாசனைகள் முழுவதும் நசிப்பதற்கும் ஆத்ம சொரூபத்தின் விபரீத பாவங்கள் நிவிர்த்தியாதற்கும் ஞான நிஷ்டையைப் பிரயத்தினத்தால் ஆசரித்தல் வேண்டும். ஞான நிஷ்டையாவது ஆத்ம சொரூபம் இப்படிப்பட்டதென்றறிந்து அந்த பாவனையிலேயே நிலைத் திருத்தலாம். (தொடரும்.)

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

"இதென்ன பிரம்ம வித்தையோ?" என்று சாதாரணமாக ஓர் சுலப மான காரியத்தைக் குறித்துப் பேசும்போது சொல்வதுண்டு. இப்படிச் சொல்லுவதால் பிரம்மவித்தை யென்பது ஏதோ ஓர் உயர்ந்த விஷயம் என் பது பெறப்படுகிறதல்லவா? பிரம்மவித்தை என்பது என்ன? இதை பிரம்ம ஞானம் என்றும் பரவித்தை யென்றும் இதனை யடையும் மார்க்கத்தை சிரே யஸ் மார்க்கம் என்றும் கூறுவர் ஆன்றோர். இதைத்தான் ஆங்கில பாஷை யில் (Theosophy) என்றும் வழங்குகிறார்கள். 'தியாசபி' என்பது ஓர் கிரேக் கப்பதம். இதனைப் பிரிக்கும்போது (தியாஸ்) அதாவது 'பிரம்ம' (ஸோபியா) ஞானம் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. தற்காலம் இந்தியாவின் பல பாகங்களில் நவீனமான முறைகளோடு பிரம்மஞான சங்கங்கள் திகழ் கின்றனவே; இவற்றின் உண்மையான பூர்வ நோக்கங்கள் பரவித்தையைப் பரப்புவதே யாகும். ஆனால் இவற்றில் நவீன நாகரீகப் பழக்க வழக்கங்கள் பல புகுந்து விரவி யிருக்கின்றமையால் உண்மையான நோக்கங்களைப் பகிர் முகமாகக் காண்பது சுலபமாயில்லை. பிரம்மஞானம் என்பது நூதனமல்ல. சிருஷ்டிக்காலம் முதல், முதல் முதலாக மக்களுக்கு மதவுணர்ச்சி ஏற்பட்ட காலந்தொட்டு, அதற்கு முன்பும் இந்த ஞானம் இருந்திருக்கிறது. ஆனால் இதனை அறிந்து தமது அனுபவத்திற் கடைப்பிடித்து உணர்ந்த மகான்கள் தத்தம் அனுபவங்களுக் கேற்ப முறைகளை வெளியிட்டார்கள். பிரம்ம ஞான மென்பது ஒன்றுதான். ஆனால் அதை அடையும் மார்க்கங்கள் மட்டும் வெவ் வேறா யிருக்கலாம். "வேறுபடும் சமயமெலாம் புகுந்து பார்க்கின், மாறுபடும் கருத்தில்லை" என்பது பெரியோர் வாக்கு. ஒவ்வொரு மதத்தின் உண்மைகளை யும் ஆராய்ந்து பார்த்தால் உயிர்ப்பாகம் என்றும், உடற்பாக மென்றும் இரண் டாகப் பிரிக்கப்படும். இவ் வுயிர்ப்பாகம் ஞானகாண்ட மென்றும், உடற் பாகம் கர்மகாண்ட மென்றும் அவற்றின் தத்துவங்கள் பிரிந்து விளங்கும். சமயங்களில் ஞானகாண்டத்தைப் பொருத்தவரையில் வித்தியாசமில்லை. கர்மகாண்டத்தைப் பற்றியவரையில் வேற்றுமைகள் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் அவ்வச் சமயங்கள் தோன்றிய காலத்தில், நாட்டின் நிலைமை, காலச்சக்கரம், தீர்க்க தரிசிகளின் நோக்கங்கள் ஆகிய இவைகளுக் குத் தகுந்தபடி கர்மானுஷ்டான முறைகளும், ஆசாரங்களும், உபாஸனை முறைகளும் தோன்றின. மதஸ்தாபகர்க ளனைவரும் அதீத ஆனந்தானுபவ முடையவர்களாதலால் அவர்கள் கர்மானுஷ்டான முறைகள் வேறுபட்டா லும், ஞானகாண்ட உண்மைகள் ஒரேவிதத் தன்மை பெற்று, ஓரே பரம் பொருளை வருணிக்கின்றன. அந்த பிரம்ம வித்தையை, ஞானமார்க்கம்

கர்ம மார்க்கங்களைச் சிறிதும் வழுவில்லாமல் அனுஷ்டிப்பது மிகவும் சிரமமான காரியமாதலால்தான் 'இதென்ன பிரம்ம வித்தையா?' என்னும் வினு நிகழ்கின்றது. இந்த கடினமான மார்க்கத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதுதான் சிரம சாத்யம். அதைக் காரியத்திற் கொண்டுவந்த பிறகு அம்மகானுக்கு ஏதுவும் நிகரில்லை. பகவான் அவன் சொற்படி ஆடுகின்றார்.

***

"நல்ல புல்லும் நாவரணைப் புல்லும்" புற்களில் இரண்டுவித முண்டு. சாதாரணமான புல் பசுக்களுக்கு இன்றி யமையாத ஆகாரமாகின்றது. இந்தப் புற்களோடு நாவரணைப் புல் என்று இன்னொருவிதப் புல்லுண்டு. இது பார்வைக்குப் பச்சைப்பசே லென்றிருக்கும்; இளவிளவென்று தழைத்து வளர்ந்திருக்கும். ஆனால் இப்புல் பசுக்களின் நாக்கை யறுத்துவிடும். இந்த நாவரணைப்புல் பார்வைக்குத் தளதளவென்று செழிப்பாய் ஓங்கி யுயர்ந்து வாட்ட சாட்டமாய் வளர்ந்திருப்பதால் மாடுகள் ஏமாற்றப்பட்டு நாவறுப்புண்டு கஷ்டப்படும். ஆகையால், வெளித் தோற்றத்திற்குப் பகட்டா யிருப்பவர்களை ஆராயாமல் நம்பி அவர்களுடன் சகவாஸம் செய்துவிடலாகாது. புத்திமான்கள் தம் விவேகமாகின்ற விளக்கால், மாயையாகிய கங்குலைப் போக்கி உண்மையான வழியை யறிந்து சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகுகிறார்கள். அவிவேகிகள் ஆய்ந்தோர்ந்து பாராமல், மாடுகள் எப்படி ஏமாந்து நாவரணைப்புல்லை மேய்ந்து துன்பப்படுகின்றனவோ, அதுபோல துஷ்டரோ டிணக்கங்கொண்டு அவத்தைப்படுவர்.

***

"மனமென்னும் மாடு" மனம் ஓர் மாட்டிற்குச் சமானம். மனமானது ஆன்மாவால் தூண்டப்படும் ஓர் தெய்வீக உணர்ச்சி யுடையது. ஆன்மாவைப் பெரியோர் பசுவென்பர். ஆகவே இந்த மனமென்னும் மாட்டை அறிவென்னும் அருங்கயிற்றால், வைராக்கியம் அதாவது மன உறுதியென்னும் கட்டுமுளையிற் கட்டி, பகவந் நாமாவாகிய புல்லைப்போட்டு உண்பிக்க வேண்டும். மனிதர் உலகில் செய்யும் காரியங்களனைத்திற்கும் இந்த மனமே காரணம். இதுதான் விவேகத்தினுதவியால் காலா காலங்களிற் செய்யவேண்டிய சத்கர்மாக்களில் நம்மைத் தூண்டுகிறது. மகான்கள் இந்த மனம் நாசமாக வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறார்கள். ஏனென்றால் மனம் நாசமானாற்றான் கர்மம் நசிக்கும்; கர்மம் தொடருகிறவரையில் பிறவி நம்மை விடவே விடாது. ஆகவே பிறவித் துன்பத்தை யொழிக்கப் பெரியோர் மனம் மாய வேண்டு மென்கிறார்கள். இம் மனோ நாசமுண்டாவதோ சாதாரணமான காரியமன்று. இவ் வுலகத்திலேயே மிகவும் அரிதென்று கூறப்படுவது ஒன்றுளதாயின் அதுவே இம்மனதைக் கட்டுப்படுத்துவதாகும். ஆசைகளை வென்று பற்றுக்களை ஜயித்த பாக்கியசாலிகளான பெரியோர்களுங்கூட, "சிந்தையை யடக்கியே சும்மாயிருக்கிற திறமரிது" என்றும், "சிந்தைதான்

தெளியாது சுழலும் வகை யென்கொலோ'' வென்றும், அஞ்சிக் கூறுகின்றனர். ஆனால் பெரியோர்கள் மனதை அடக்க வேண்டுமென்று மட்டும் சொல்லவில்லை. அதற்கு ஹிதமான உபாயங்களையும் ஆங்காங்கே அவரவர் அனுபவசித்திக்கேற்பக் கூறியிருக்கின்றார்கள். அனுதினமும் சிறிது சிறிதாக பொருள், பெண் இவற்றிலுள்ள ஆசைகளைவிட்டு வரவேண்டும். மனதை, ஐம்புலன்களையும் தாண்டாதவாறு தடுத்துவரவேண்டும்.

> பொறி வாயிலைந்தவித்தான் பொய்தீ ரொழுக்கம்
> நெறி நின்றார் நீடுவாழ் வார்.

என்னும் பொய்யா மொழிக்கிணங்க இந்திரியங்களை யடக்கியவர்களே முக்தியென்னும் அழிவிலாப் பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவர். இதை எப்படிச் செய்வது? முதலில் கண்ணை எடுத்துக் கொள்வோம். இதற்கு எந்த வஸ்துவையும் பார்க்கக்கூடிய சக்தி யமைந்திருக்கிறது. இக்கண் பரஸ்திரீயைப் பார்க்கும்போது அதன் மூலஸ்தானம்—அதாவது யஜமானன் மனம் இச்சைகொண்டு, தேக அவயவங்களாகிய தூதர்களைத் தூண்டி, தன்னிச்சையைப் பூர்த்திசெய்து கொள்ளும் வரையில் இடையறாமல் முயற்சிக்கின்றது. ஆகவே மென்மேலும் இன்ப துன்பமோ, பாபமோ சம்பவிக்கின்றது. அதனால் பிறன் மனைவியைக் காணும்போது இரண்டு நிமிஷங்களுக்குக் கண்களை மூடிக்கொள்வது ஓர் சுலபமான ஆரம்பப் பழக்கம். இப்படிச் செய்துகொண்டு வந்தால் கொஞ்சகாலத்தில் இந்த இந்திரியத்தை வசப்படுத்திவிடலாம். இப்படி ஒவ்வொன்றையும் படிப்படியாக வென்று மகான்கள் நற்கதி யடைந்தார்கள்.

"மனிதனும் மிருக சுபாவமும்" 'படி' என்று இப்பூலோகத்திற்கு ஓர் பெயருண்டு. ஏனென்றால் முக்தியடைவதற்கு இது ஒரு படிப்பாயிருக்கின்றமையால்தான். தேவலோகத்திலுள்ளவர்களும் நெறி தவறி நடப்பார்களானால் அதனால் ஏற்படும் பாபத்தைப் போக்கிக்கொள்ள பூலோகத்திலேயே வந்து பிறந்து விமோசனமடைய வேண்டியவரா யிருக்கிறார்கள். ஆலால சுந்தரர், கைலாசத்தில், பூசையினிமித்தம் பூக்கொய்து கொண்டிருந்த பூவைகளான கமலினி அநிந்திதை ஆகிய இரண்டுபேரையும் கண்டு காதல் கொண்டதால், அதனால் ஏற்பட்ட தோஷத்தை நிவர்த்தி செய்துகொள்ள இவ்வுலகத்தில் வந்து தோன்ற நேர்ந்தது. இவ்வளவு மேன்மை வாய்ந்த இவ்வுலகில் ஜன்மமெடுப்பதன் பயன் கேவலம் பொருள் தேடுவதுமட்டுமல்ல. மாதர் வலையிற் சிக்கி மாய்வதற்கும் மனிதன் இவ்வுலகிற் றோன்றுகிறதில்லை. அழிவற்ற ஞானத்தைச் சம்பாதிக்கவே நாம் இவ்வுலகிற் பிறந்தோம். ஆனால் சுபாவத்தில் நம்மிடம் மிருகத் தன்மையே மிகுதியா யிருக்கின்றது. பன்றி சாக்கடைகளில் விழுந்து புரள்வதும், மலம் முதலியவற்றைத் தின்பதுமாகக் கொழுத்து வளர்ந்து யதேச்சையாகத் திரிகின்றது. அதுபோல மனிதரும் வயிறார உண்பதும், மலபந்தங்களால் மூடப்பட்டிருக்கும் விஷயாதிகளிற் கிடந்துழல்வதும், ஓர் முடிவும் குறிப்புமின்றி கண்ட இடங்களில் அலைந்து திரிவதுமாகக் காலத்தை வீணாகக் கழிக்கின்றனர். நாயின் சுபாவங்களும் மனிதரிடத்தில் நிறைந்திருக்கின்றன. அதைப்போல் நன்மை தீமை தெரி

யாமல், நாய் கண்ட எச்சிலைகளிலெல்லாம் வாயை வைத்துத் தின்பதுபோல் மனிதனும் ஒழுகி அல்லற் படுகின்றான். நாய் மாம்சமும் இரத்தமும் உள்ள தாக நினைத்து வெறும் எலும்பைக் கடித்து, கடைசியில் தன் வாயிலிருந்து வெளிப்படும் இரத்தத்தை அந்த எலும்புத் துண்டிலிருந்து வருவதாகக் கருதி மகிழ்ந்து அருந்துவதுபோல், இன்பமே எள்ளளவுமில்லாத விஷயங்களில் இன்பமிருப்பதாகக் கருதி ஒருவித அசட்டு ஆனந்தத்தை யடைகின்றனர் மனிதர். இன்னும் கவனித்தால், ஒரு எச்சிலையைக் கண்டால் நாய் தானே அதை உண்ண முற்படும். வேறு நாய்கள் வந்தால் இடங்கொடுக்காது. அது போல மனிதரும் சுய நலப்பிரியராய் அலைகிறார்கள். நாயைப்போலவே எடுத்த தற்கெல்லாம் மனிதனுக்குக் கோபமும் வருகிறது. உண்பொருள் கண்ட விடத்திற்குக் காக்கைகள் 'காகா' வென்று கத்திக்கொண்டு ஓடுகின்றன. அதுபோல மனிதரும் சோறுகண்ட இடமே சுவர்க்கமென்று அலைகின்றனர். புலி எதிர்ப்பட்ட மனிதரைக் கொல்லுகிறது. அதுபோல் மனிதன் பிறரை ஹிம்சிப்பதிலேயே தாம் மகிழ்ச்சி யடைகின்றனர். தந்திரத்திற்கு நரிகளை உதாரணமாகச் சொல்வதுண்டு. நரியைப் போலவே மனிதரும் நடந்து கொள்ளுகிறார்கள். ஆகவே, பகுத்தறிவு ஒன்றைத் தவிர, மிருகங்களுக்குள்ள இயற்கையான சுபாவங்கள் யாவும் மனிதரிடம் பொருந்தி யிருக்கின்றன. அந்தப் பகுத்தறிவுதான் இது பாபம், இது புண்யமென்று மனிதனுக்கு விளக் கிக்காட்டுகிறது. பெரியோர்களால் வரையறுக்கப்பட்ட விஷயங்களைக் கவனித்து நன்னெறியைக் கடைப்பிடித்து ஒழுகாவிடில் மனிதப் பிறவி யெடுத்ததின் பயன்தான் யாது? மிருகங்களுக்கும் நமக்கும் உள்ள பேதந்தானென்ன?



# ஆரியசித்தாந்தம்.

## உலக ஞானம்.

(632-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

அரசனே! தேவதேவனுடைய கிருபாகடாக்ஷத்தினால் நான் அறிந்
திருக்கிறவைகளைச் சொல்கிறேன் கேளும். அரசனே நான் அறிந்த மட்டில்
பாபம் நிறைந்த காலம் எப்போது வருமென்பதைச் சொல்கிறேன். கிருத
யுகத்தில் எல்லாரும் வஞ்சனையற்றிருந்தார்கள். லோபமும் பொறாமையும்
கிடையாது. அப்போது பசு வடிவமான தர்மதேவதை நாலு பாதங்களில்
நடந்தது. திரேதாயுகத்தில் பாபம் தோன்றித் தருமத்தின் ஒரு காலை
முறித்துவிட்டது. ஆகையால் அப்போது அது மூன்று பாதங்களால் நடந்
தது. துவாபர யுகத்தில் பாபம் அரைப் பங்கும் புண்ணியம் அரைப்பங்குமா
யிருந்தது. இருண்ட கலியுகத்தில் பாபம் தர்மத்தின் மூன்று பங்கை
விழுங்கி விடும். ஆகையால் கால் பங்கு தர்மந்தான் மனிதரிடத்தில் இருக்
கும். அரசனே! மனிதருடைய ஆயுசு, பலம், சரீரம், சக்தி, அறிவு இவை
கள் யுகத்துக்கு யுகம் குறையும். நாலு வருணத்தாரும் வஞ்சனையாகவே
தருமம் செய்வார்கள். வஞ்சகர்கள் தர்மம் செய்ய விரும்புகிறவர்களை வஞ்
சகமான தர்ம வலைக்குள் சிக்குப்படுத்துவார்கள். எல்லாரும் படித்தவர்
களைப் போல நடிப்பார்கள். சத்தியத்தை இழந்துவிடுவார்கள். அதனால்
அவர்களுக்கு வாணாள் குறையும். ஆயுசு குறைகிறபடியால் அதிகமான
அறிவை அடையச் சக்தியற்றுப் போவார்கள். கல்வி அறிவு குறைந்திருக்
கிறபடியால் அவர்களுக்கு ஞானமும் குறையும். அதனால் லோபமும் பொறா
மையும் அதிகரிக்கும். அப்போது மனிதர்களுக்குப் பொறாமையும், லோப
மும், காமமும், கோபமும் அதிகரிக்கும். இவ்வாறிருப்பதினால் மனிதர்கள்
ஒருவரை யொருவர் பகைத்துக் கொலைத் தொழிலையும் செய்வார்கள். இப்
படித் தர்மம் குறைவுபடும். தவமும் சத்தியமும் வைசியரை அடையும்.
அந்தணரும் க்ஷத்திரியரும் தாழ்ந்த வருணத்தாராகக் கருதப்படுவார்கள்.
உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களாயும், தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்களாகவும் கரு
தப்படுவார்கள். யுகமுடிவு காலத்தின் நிலைமையி விப்படி யிருக்கும். அக்
காலத்தில் சணலால் நெய்த வஸ்திரம் சிறந்ததாகக் கொள்ளப்படும். புரு
ஷர்கள் ஸ்திரீகளையே சிநேகிதர்களாக மதிப்பார்கள். ஆட்டு மாம்சமும்
ஆட்டுப் பாலும் அவர்களுக்கு உணவாகும். ஏனென்றால் அப்போது பசுக்

கள் இல்லாமற் போய்விடும். அப்போது செய்யப்படுகிற தர்மமெல்லாம் வஞ்சனையாகவே யிருக்கும். யுகமுடிவு காலத்தில் ஜனங்கள் பகைகொண்டு ஒருவரை யொருவர் கொல்ல முயல்வார்கள். நாஸ்திகர்களா யிருப்பார்கள். பூமியும் வரட்டு நிலமாய்ப் பலன் கொடாது. தேவ பிதிர்கர்மங்களில் பிரிய முள்ளவர்களும் லோபத் தனத்தால் பிறர் சொத்தைக் கவர்ந்து கொள்வார்கள். புத்திரனுக்குச் சொந்தமானதைப் பிதா அனுபவிப்பான், பிதாவுக்குச் சொந்தமானதைப் புத்திரன் அனுபவிப்பான். சாஸ்திரங்களினால் விலக்கப் பட்டவைகளெல்லாம் மனிதர்களால் அனுஷ்டிக்கப்படும். பிராமணர்கள் வேதத்தை நிந்திப்பார்கள். நோன்புகளை அனுஷ்டிக்கமாட்டார்கள். அவர்கள் அறிவு தர்க்க யுக்திகளால் மறைக்கப்பட்டிருக்கும். யாகங்களையும் ஹோமங்களையும் செய்யமாட்டார்கள்.

தர்க்க யுக்திகளால் மறைக்கப்பட்டிருக்கும் அவர்களுடைய அறிவு ஈனமும் தாழ்வுமான விஷயங்களையே நாடும். மனிதர்கள் தாழ்ந்த நிலங்களை உழுவார்கள். ஒரு வயதுள்ள இளங் கன்றுகளையும் கட்டி ஏரில் உழுவார்கள். அவைகளின் மேல் பெரும் சுமைகளை யேற்றுவார்கள். புத்திரன் பிதாவைக் கொல்வான். பிதா தன் புத்திரனைக் கொலை செய்வான். அது அவர்களுக்கு அபகீர்த்தி உண்டாகாது. இப்படிப்பட்ட ஈனச் செய்கைகளால் மகிழ்ச்சி யடைவார்கள். உலகமெங்கும் மிலேச்சாசாரம் பரவி நிறைந்திருக்கும். மிலேச்சருடைய அபிப்பிராயங்களே நிறைந்துவிடும். வைதிக மதாசாரங்களும் யாக யக்ஞங்களும் விலக்கப்படும். எவ்விடத்திலும் மகிழ்ச்சியிராது. உற்சவக் கொண்டாட்டங்களெல்லாம் ஒழிந்து போய்விடும். மனிதர்கள் ஆதாவற்றவர்களுடைய சொத்தைக் கவர்ந்து கொள்வார்கள். சினேகிதர் இல்லாமல் இருக்கிறவர்களுடைய சொத்துக்களையும், விதவைகளின் சொத்துக்களையும் அபகரித்துக் கொள்வார்கள். மனிதர்கள் அற்ப ஊக்கமும் பலமும் உடையவர்களாய், அறிவற்றவர்களாய்ப் பொருளாசையும் அறிவீனமும் உள்ளவர்களாய்ப், பாவச் செய்கை யுடையவர்களாய்த் துஷ்டர்களால் கொடுக்கப்படும் தானங்களை இகழ்ச்சியோடு ஏற்றுக்கொள்வார்கள்.

அரசனே! இராஜாக்கள் பாபச் சிந்தை யுடையவர்களாயும் அறிவில்லாதவர்களாயு மிருப்பார்கள். அப்படி யிருந்தும் அறிவுள்ளவர்களைப் போல நடிப்பார்கள். அவர்கள் இறுமாப்புக் கொண்டு ஒருவரை யொருவர் கொல்ல முயல்வார்கள். அடிக்கடி சண்டை யிடுவார்கள். யுக முடிவில் இராஜாக்களே போக கண்டகர்களாவார்கள். பிரஜைகளைத் தண்டிப்பதிலேயே பிரியமுடையவர்களாய் இருப்பார்கள். அப்படித் தண்டிப்பதினாலே மகிழ்ச்சியாயிருப்பார்கள். நல்லவர்களும் யோக்கியர்களுமா யிருக்கிறவர்களை யெதிர்த்து வருத்துவார்கள். அவர்கள் கதறினாலும் இரக்கமில்லாதவர்களாய் அவர்களுடைய செல்வத்தையும் மனைவியையும் அபகரிப்பார்கள். அந்தக் காலத்தில் ஒருவரும் பெண்களை விவாகம் செய்து தரும்படி கேட்க

மாட்டார்கள். பெற்றவர்களும் பெண்களை விவாகம் செய்து கொடுக்கவு மாட்டார்கள். பெண்கள் தாமாகவே கணவர்களைத் தேடிக்கொள்வார்கள். அர சர்கள் அஞ்ஞானத்தினால் புத்தி மயங்கித் தாங்கள் அடைந்திருக்கிற பொரு ளால் திருப்தியடைய மாட்டார்கள். எவ்வகையிலாவது குடிகளை வருத்தி அவர்கள் பொருளை அபகரிக்க முயல்வார்கள். நிச்சயமாகவே உலக முழு மையும் மிலேச்சத் தன்மையால் நிறைந்துவிடும். கலியுகம் வந்தபோது வலக்கை இடக்கையை மோசம் செய்யும். ஜனங்கள் படித்தறிந்தவர்களைப் போல நடந்து உண்மையைக் கெடுப்பார்கள். கிழவர்கள் யௌவனர்களைப் போல நடித்துப் புத்தி மழுங்கி யிருப்பார்கள். யௌவனர்கள் கிழவர்களைப் போலப் புத்திமயங்கிக் கிடப்பார்கள். கோழையாயிருப்பவன் தைரியசாலியா யிருப்பவர்களைப்போலப் புகழப்படுவார்கள். தைரியமுள்ளவன் கோழை களைப்போல மனங்கலங்குவான். மனிதர் ஒருவரை யொருவர் நம்பமாட் டார்கள். பொருளாசையாலும் அறிவீனத்தினாலும் உலகமெல்லாம் ஒரே உணவை உண்ணும். பாபமே விருத்தியாகும். புண்ணியம் மழுங்கிப்போகும். பிராமணர் க்ஷத்திரியர் வைசியர்கள் இல்லாமற் போவார்கள். அந்த ஜாதி களின் அடையாளமே இல்லாமற் போய்விடும். எல்லாரும் ஒரே ஜாதியாய் விடுவார்கள். பிதாக்கள் புத்திரர்களை மன்னிக்க மாட்டார்கள். புத்திரர் களும் பிதாக்களை மன்னிக்க மாட்டார்கள். மனைவிமார்கள் தங்கள் கணவர் களுக்கு அடங்கிப் பணிவிடை செய்ய மாட்டார்கள். இக்காலத்தில் மனி தர்கள் வாற்கோதுமையையும் கோதுமையையும் தேடியுண்பார்கள். அவை விளையும் தேசங்களைத் தேடியடைவார்கள்.

அரசனே! அக்காலத்தில் ஸ்திரீகளும் புருஷர்களும் சுயேச்சையாய் நடப்பார்கள். ஒருவர் செய்வதை மற்றொருவர் செய்யமாட்டார்கள். மிலேச்சாசாரமே யெங்கும்பரவி யிருக்கும். மனிதர்கள் சிராத்தாதி கிரியை களால் தேவர்களை ஆராதிக்க மாட்டார்கள். ஒருவர் மற்றொருவருடைய வார்த்தையைக் கேட்கமாட்டார்கள். ஒருவர் மற்றொருவருக்குக் குருவாக இருக்கமாட்டார்கள். ஒருவரும் குருவைத்தேடி யடையமாட்டார்கள். குருவை மதித்து மரியாதை செய்யமாட்டார்கள். உலகம் முழுமையும் அஞ் ஞானந்தகாரத்தால் மூடப்பட்டிருக்கும். அப்போது மனிதர்களுடைய ஆயுசுகாலம் பதினாறு வருஷமாக இருக்கும். இந்தக்குறைந்த வயதுக்குள் மரிப்பார்கள். பதினாறு வயதே பூர்ணாயுசாகக் கருதப்படும். ஐந்து ஆறு வய துடைய பெண்கள் புத்திரர்களைப் பெறுவார்கள். புருஷர்கள் ஏழு எட்டு வயதில் புத்திரர்களுக்குப் பிதாவாக இருப்பார்கள். இந்தக்காலத்தில் ஸ்திரீ கள் தங்களுடைய கணவர்களால் மட்டும் திருப்தியடைய மாட்டார்கள். அப் போது மனிதர்களுக்குத் திரவியம் சொற்பமாகவே யிருக்கும். மனிதர் கள் பொய்யாக மதச் சின்னங்களைத் தரிப்பார்கள். எரிச்சலும் பொரு ளாசையும் எங்கும் நிறைந்திருக்கும். ஒருவனும் பிறனுக்குக் கொடுக்க

மாட்டான். வஞ்சனையும் துரோகமும் மிகுந்திருக்கும். சாலைகளெல்லாம் காமுகர்களாலும் வியபசாரப் பெண்களாலும் நிறைந்திருக்கும். பெண்கள் தங்கள் கணவர்களைப் பகைப்பார்கள். மனிதர்கள் எல்லாவற்றையும் புசிப்பார்கள். மனிதர்கள் எல்லாச் செய்கைகளையும் சுயேச்சையாகவே செய்வார்கள். பொருளாசையால் கொள்ளல் விற்றல்களிலும் ஒருவரை யொருவர் மோசம் செய்வார்கள். தாங்கள் விரும்பியபடி நடப்பார்கள். துர்நடக்கையுடையவர்களாய் ஒருவரை ஒருவர் நிந்திப்பார்கள். இரக்கமில்லாமல் மரங்களையும் சோலைகளையும் அழிப்பார்கள். தங்களுடைய ஜீவனத்தைக் குறித்துக் கவலை அடைந்திருப்பார்கள். பொறாமையினால் பிராமணர்களைக் கொன்று அவர்களுடைய சொத்துக்களை அபகரித்து அனுபவிப்பார்கள். பிராமணர்கள் துன்பம் அடைந்து ஐயோவென்று கதறி அழுவார்கள். அந்தப்பிராமணர்களை உலகத்தில் ஒருவரும் காப்பாற்ற மாட்டார்கள்.

மனிதர்கள் எப்போது ஒருவரை யொருவர் பகைத்துக் கொல்லுகிறார்களோ, எப்போது அவர்கள் துஷ்டர்களாய் இதர பிராணிகளை வதைக்கிறார்களோ அப்போது கலியின் முதிர்ச்சியென்று கருதவேண்டும். அரசனே! இக்காலத்தில் பிராமணர்களுடைய சொத்துக்களை யெல்லாம் திருடர்கள் கவர்வார்கள். அவர்கள் காக்கைகளைப்போலக் கதறிக்கொண்டு ஆறுகளையும் தகாத இடங்களையுந் தேடிக்கொண்டு ஓடுவார்கள். அந்தப் பயங்கரமான காலத்தில் அரசர்கள் பிராமணர்களுக்குக் கடினமான வேலைகளை யிடுவார்கள். அவர்கள் தகாதவேலைகளையும் செய்வார்கள். சூத்திரர்களுக்கு வேலைக்காரர்களாவார்கள். சூத்திரர்கள் மத உபதேசம் செய்வார்கள். பிராமணர்கள் அதைக்கேட்டு அவர்கள் சொன்னபடி செய்வார்கள். தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்கள் ஆவார்கள். எல்லாம் மாறுதலை யடையும். மனிதர்கள் தேவாராதனையைவிட்டு எலும்புகளை வணங்குவார்கள். அப்போது சூத்திரர்கள் பிராமணர்களுக்குப் பணிவிடை செய்ய மாட்டார்கள். பிராமணர்களுடைய ஆச்சிரமங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், சர்வ கலாசாலைகளிலும், தேவாலயங்களிலும், புண்ணியஸ்தலங்களிலும் புண்ணிய தீர்த்தங்களிலும் கல்லறைகள் கட்டப்படும். அவைகள் அவலட்சணமா யிருக்கும். இவைகளெல்லாம் கலியுகமுதிர்ச்சிக்கு அடையாளமாம். அப்போது மனிதர்கள் பிராமணர்களுடைய புண்ணிய ஸ்தலங்கள் முதலியவற்றில் பிரேதங்களை அடக்கம் செய்வார்கள். இவைகள் கலியுகத்தில் நடக்கும்.

அரசனே! எப்போது மனிதர்கள் துஷ்டர்களாயும், பாபிகளாயும், குடியினால் வெறிகொண்டவர்களாயும் இருக்கிறார்களோ அப்போது கலியுகம் பிறந்ததென்று அறிந்துகொள்ளவேண்டும். அரசனே! எப்போது ஒரு புஷ்பத்தில் மற்றொரு புஷ்பம் உண்டாகிறதோ அப்போது கலியுகம் பிறந்து விட்டதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

ஒருகாயில் மற்றொருகாயும் உண்டாகும். அந்த யுகத்தில் சரியான காலமழை பொழியாது. கர்மங்கள் முறைப்படி சரியாய்ச் செய்யப்படமாட்டா. பிராமணர்களும் சூத்திரர்களும் சண்டையிடுவார்கள். சூத்திரர்களே சண்டை தொடங்குவார்கள். மிலேச்சர்கள் நிறைந்துவிடுவார்கள். பிராமணர்கள் வரிக்குப்பயந்து திசைகள்தோறும் சிதறி ஓடுவார்கள். மனிதர்களுக்குள் வேற்றுமையிராது. அவர்கள் காடுகளுக்குப்போய்க் காய் கனி கிழங்குகளைத்தின்று ஜீவிப்பார்கள். இந்தக் கஷ்டகாலத்தில் மனிதர்களிடத்தில் சரியான நடக்கைகளிரா. சிஷ்யன் குருவின் உபதேசத்தை மதிக்கமாட்டான். குருவை இம்சிக்கவும் தொடங்குவார்கள். குருமார்கள் தரித்திரர்களாய்ப் பிறரால் அவமதிக்கப்படுவார்கள். சிநேகிதர்களும் சுற்றத்தார்களும் பொருளாசையாலேயே நேசமாயிருப்பார்கள். அக்காலத்தில் ஒவ்வொருவனும் தரித்திரனாயிருப்பான். திக்குகளெல்லாம் எரிந்துகொண்டிருக்கும், நட்சத்திரம் முதலியன ஒளியற்றுப்போகும். கிரகங்களும் கிரகசம்பந்தங்களும் கொடுமையாயிருக்கும். காற்று பலமாய் வீசும். விண்கொள்ளிகள் அநேகமாய்த் தோன்றிப் பயமுறுத்தும். ஜனங்கள் பயப்படுவார்கள். சூரியன் வேறு ஆறு சூரியர்களுடன் சேர்ந்து உதிப்பான். எவ்விடத்திலும் பெரிய சத்தமுண்டாயிருக்கும். எங்கே பார்த்தாலும் பெருநெருப்பாயிருக்கும். சூரியன் அஸ்தமிக்கிற வரைக்கும் இராகுவால் பீடிக்கப்படுவான். அக்காலத்தில் தானியங்கள் நன்றாய் விளையா. பெண்கள் எப்போதும் கொடுமையாகப் பேசுவார்கள். கணவனுக்கும் அடங்கமாட்டார்கள். அவர்கள் இரக்க மில்லாதவர்களாய் எப்போதும் அழுது கொண்டிருப்பார்கள். தங்கள் குழந்தைகளைக் கொல்வார்கள். இவைகள் கலியின் முதிர்ச்சியாம். பிரயாணிகளுக்கு ஆகாரம் அகப்படாது. யாசித்தாலும் குடிக்கத் தண்ணீரும் தங்க இடமும் அகப்படாது. காக்கைகள் சர்ப்பங்கள் கழுகுகள் பருந்துகள் முதலியவை மாறுபாடாகக் கத்திக்கொண்டிருக்கும். மனிதர்கள் சுற்றத்தாரையும் சிநேகிதர்களையும் விட்டுவிடுவார்கள். தங்கள் வீடுகள் ஊர்கள் நாடுகள் இவைகளை விட்டு வேறு இடங்களைத் தேடுவார்கள். அப்பா, அம்மா, குழந்தா யென்கிற சத்தங்கள் எங்கும் கேட்கப்படும். துன்பங்கொண்டு பல தேசங்களிலும் அலைந்து திரிவார்கள். (தொடரும்.)

### ஆம்! சரி! அப்படியே!

நீ சொல்லுவதற்கெல்லாம் அது எதுவானாலும் சிலர் 'ஆம்! சரி! அப்படியே!' என்று சொல்லிக்கொண்டே இருப்பார்கள். அவர்களை நீ நம்பிவிடாதே. அவர்களிடம் வெகு ஜாக்கிரதையாகப் பழகு. உன்னை ஆக்ஷேபித்துப் பேசி உன்னுடன் தர்க்கிக்கிறவனை நீ நம்பு. அவனால் பல நன்மைகள் ஏற்படும். எப்பொழுதும் கோபமுள்ள இடத்தில் குணமும் உண்டு.

சமூகச் சீர்திருத்தத்தில்

# பெண்களுக்குள்ள ஸ்தானம்

(முருகன்)

### தாய்மாரின் உயர்பதவி

கட்டுரை எழுதுவோரெல்லாம் தாம் எழுதத் தொடங்கும் விஷயமே மிக முக்கியமானதென்று புகழ்ந்து கூறுவது சர்வ சாதாரண வழக்கம். மது விலக்கு விஷயத்தைப்பற்றி எழுதுவோர் உலக க்ஷேமத்துக்கு அதைவிடச் சிறந்த சீர்திருத்தமில்லையென்று கூறுவர். கல்வி விஷயமாக எழுதுவோரும் கல்விப் பயற்சியே உலகத் துன்பங்களை ஒழிக்கும் சஞ்சீவியென மொழிவர். உண்மையில் உலகத்துக்கு நன்மை யளிக்கும் எல்லாச் சீர்திருத்தங்களும் மிகவும் இன்றியமையாதனவாகும்.

இப்பொழுது நமது ஜனசமூகத்தில் காணப்படும் ஊழல்களைச் சொற்ப கால உழைப்பினால் நீக்கிவிடலாமென்று எண்ணுவது பகற்கனவே யாகும். இந்த சமூக ஊழல்களுக்கு மூலகாரணமா யிருப்பது எது என்று நாம் நுட்பமாக ஆராய்ச்சி செய்தால், நமது சமூக வாழ்வில் பெண்கள் முக்கியஸ்தானம் பெறாமையே எல்லாத் தீமைகளுக்கும் மூலகாரணம் என்பது இனிது விளங்கும்.

ஒவ்வொரு குடும்பத்துக்கும் குடும்பத் தலைவி பெண்ணாகவே இருக்கிறாள். குடும்ப வாழ்வில் பெண்ணுக்கே புருஷனைவிட ஜாஸ்தி பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

> "இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
> இல்லாளும் இல்லாளே ஆமாகில்"

என்னும் ஔவை மொழியும் இதனையே வலியுறுத்துகின்றன.

குடும்ப அங்கத்தினரின் க்ஷேமத்தைப் பாதுகாப்பதும், குடும்பத்தாரை நல்வழிப் படுத்துவதும் பெண்கள் கடமையாக இருக்கிறது. ஒரு சமூக மக்களை நல்லவராக்கவோ தீயவராக்கவோ பெண்களுக்கு சக்தியுண்டு. ஒரு சமூகத்தை உருப்படுத்தும் பொறுப்பு இயல்பாக மாதரிடமே அமைந்திருக்கிறது. உலகத்தில் பெயர்பெற்ற மகான்களின் சரித்திரங்களை நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால் அவர்களுடைய உயர்ச்சிக்கும் புகழுக்கும் காரணமா யிருந்தது அவர்கள் தாய்மாரே என்ற உண்மை நிச்சயமாகப் புலனாகும். "என் 12 புத்திரர்களும் போர்க்களத்தில் இறந்தாலும், அவர்களில் ஒருவனாவது வீட்டில் சோம்பி யிருப்பதை நான் பொறுக்க மாட்டேன்" என்று கூறிய "வனப்னியோ" என்ற உரோம மாதைப்போன்ற வீரத் தாய்மாரையுடைய சமூகம் முன்னேற்ற மடையாதொழியுமோ ?

> "நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
> முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
> படையழிந்து மாறினனென்று பலர்கூற

மண்டமர்க்குடைந்தனனாயின் உண்டவென்
முலையறுத்திடுவன் யானெனச் சினைஇக்
கொண்டவாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும்பெரிது வந்த ".

வீரத்தாய்மாரும் பண்டைக் காலத்துத் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்தனர்.

வேறொரு வீரத்தாயைப்பற்றி ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பண்டைத் தமிழ்ப் புலவர் கூறுவதாவது:

"கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிராதல் தகுமே
மேனாளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருநலுற்ற செருவிற்கிவள் கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
யொரு மகனல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே"

அத்தகைய வீரத்தாய்மார் இப்பொழுது தமிழ் நாட்டில் உளரோ? குடும்பத்துக்கும் சமூகத்துக்கும் தேசத்துக்கும் அவமானத்தை யுண்டு பண்ணும் அதம புத்திரர்கள் தோன்றுவதற்குக் காரணம் உத்தமத்தாய் மாரின் குறைவேயாகும். மாத்ரு தர்மத்தைச் செவ்வனே யுணர்ந்த தாய் மார் வாழும் நாடே நன்னாடு—பொன்னாடு—புனிதநாடு.

## இல்லறம் நடத்தல்

மாதர்களின் முதற்கடன் இல்லறம் நடத்தலே யாகும். மேனாடுகளில் பெண்கள் தேசீய விஷயங்களில் தாராளமாக ஈடுபட்டு உழைக்கின்றனர். கீழ் நாடுகளிலும் பெண்கள் ராஜீய விஷயங்களில் ஈடுபட முன்வந்திருக்கின்றனர். பெண்கள் ராஜீய உழைப்பில் ஈடுபட வேண்டியது தேசீய முன்னேற்றத் துக்கு இன்றியமையாதது என்று ஒரு சாரார் கூற்றம் செய்கின்றனர். ஆகவே மாதர்களின் முதற்கடன் இல்லறம் நடாத்தலேஎன்று கூறியது பொருந்துமா என்று சிலர் சந்தேகம் கொள்ளலாம். ஆனால் இல்லறத்தின் புனிதத் தன்மை யையும், மேம்பாட்டையும் பற்றிச் சிறிது சிந்தனை செய்வோருக்கு இந்த சந்தேகம் உண்டாகவே செய்யாது. மனித வாழ்க்கையை நரகமாக்கவும் சுவர்க்கமாக்கவும் உள்ள சக்தி மக்களிடத்திலேயே இருக்கிறது. உலகம் தோன்றியது முதல் நாளதுவரை மகான்கள் செய்துள்ள அரும்பெரும் காரியங்களுக்கெல்லாம் மூல காரணமாயிருப்பது தாய்மாரே யாகும்.

## கணவரைப் பேணல்

இல்லற மகிமையைச் செவ்வனே அறியவேண்டுமானால், அதன் ஒவ் வொரு பகுதியையும் நாம் ஆராய்ந்துணரல் வேண்டும். மனைவியின் முதற்

கடமை கணவரைப் பேணல்; இரண்டாவது கடமை மக்களைப் பேணல். கணவரைப் பேணல் மாதர்களின் முதற் கடமை என்று கூறும்போது தற்காலப் பெண்களுக்கு வெறுப்புண்டாகக் கூடும். அவ்வாறு அவர்களுக்கு வெறுப்புண்டாவதற்குக் காரணம் கணவரைப் பேணல் என்னும் சொற்றொடரின் உட்பொருளை அறியாமையே யாகும்.

கணவனுக்கு சதா அடங்கி நடப்பதும், அவனுக்கு மகிழ்ச்சி புகட்டுவதும், சிற்றின்ப சுகமளிப்பதும் பெண்களின் கடமை என்றெண்ணுவது மூட்டாள்தனமாகும். குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கும் சமூகமும் தேசமும் முன்னேற்றமடைவதற்கும் அல்லும் பகலும் உழைக்கும் ஒரு புருஷனைப் பேணுவது அவனது மனைவி கடமை யல்லவா? அத்தகைய புருஷனைப் பேணுவதைப் பெண்கள் ஒரு பெருமையாக மதியார்களோ? உலக முன்னேற்றத்துக்காக உழைக்கும் மகாத்மா காந்தியைப் பேணும் கஸ்தூரிபாய் தேவி, மறை முகமாக உலகத்தையும் பேணவில்லையா? ஒரு உத்தம கணவனுக்கு ஊழியம் செய்யும் மனைவி மறை முகமாக உலகத்துக்கே ஊழியம் செய்கிறாள் என்பதை யாவரும் மனதில் பதிக்க வேண்டும். ஹூக்கர் என்பார் ஒருநாள் தன் நண்பர்களோடு வார்த்தையாடிக் கொண்டிருக்கையில், தொட்டிலிற் கிடந்த குழந்தை அழுவது கண்டு கோபம் கொண்ட மனைவி தொட்டிலை ஆட்டும்படி கணவனுக்குக் கட்டளை யிட்டதாகவும், உடனே ஹூக்கர் தன் நண்பர்களை அனுப்பிவிட்டுத் தொட்டிலை ஆட்டியதாகவும் ஒரு கதையுண்டு. அத்தகைய மாதர்களை நாம் உத்தம மாதாகக் கருதக்கூடாது. உத்தம மாதர்களைக் காண விரும்புவோர் புராண காலங்களிலும் சரித்திர காலங்களிலும் வாழ்ந்த வீரபத்தினிகளை ஞாபகத்தில் கொண்டுவரவேண்டும்.

## மக்களைப் பேணல்

மக்களைப் பேணல் மாதர்களின் நீங்காக் கடன். பெண்கள் இந்தக் கடனை மிக்க பயபக்தி விசுவாசத்துடன் ஆற்றவேண்டும். இந்தக் கடன் ஜாதிமத வித்தியாசமின்றி எல்லா மாதர்களுக்கும் பொதுவானதாகும். உலகத்தின் பிற்கால நிலை பெண்கள் கையிலேயே அடங்கி யிருக்கிறது. லோக நாயகனுகிய கடவுள் மக்களைப் பேணும் உயரிய—பரிசுத்தமான—கடமை மாதர்களிடம் ஒப்படைத்திருக்கிறார். அடிமை நாடான இந்தியாவை சுதந்தர நாடாக்கும் உபாயம் பெண்களிடத்திலேயே இருக்கிறது.

இந்த சந்தர்ப்பத்தில் காலஞ்சென்ற தேசபக்தர் வ. வெ. சுப்பிரமணியய்யர் இந்தியத் தாய்மாரை, நோக்கிக்கூறிய பொன் மொழிகள் என் ஞாபகத்துக்கு வருகின்றன. அவையாவன:—"குழந்தைகள் துஷ்டர்களாய் வேண்டுமானாலும் போகட்டும், ஆனால் அவர்களைப் பங்காளிகளாக மட்டும் ஆக்கி விடாதீர்கள்." நெல்சன் என்னும் ஆங்கிலக் கப்பல் வீரன் சிறு பையனாக இருக்கும்போது ஒரு நாள் முழுதும் காட்டிலும் மேட்டிலும் அலைந்து விட்டுச் சாயங்காலந் தான் வீட்டுக்கு வந்தானாம். அவன் பாட்டியார் "தெரியாத இடங்களெல்லாம் சுற்றினாயே. உனக்குப் பயமாக இல்லையா, அப்பனே?" என்று அவனைக் கேட்டதற்கு "பயம் எப்படி யிருக்கும்? பாட்டி சொல்லு!" என்று நெல்சன் பதில் சொன்னானாம். ஜப்பானில் சாமுராயர்களின் குழந்தைகளுக்கு ஐந்து வயதானதும் அவர்களைத் துணையின்றிச் சுடுகாட்டங் கரைக்கு அனுப்பி அங்கிருக்கும் எலும்புகளைப் பொறுக்கி வரச் சொல்லுவார்

களாம். ஸ்பார்த்தாவில் மனவுறுதி காட்டாத குழந்தைகளை ஜாதியிலேயே சேர்த்துக்கொள்ளமாட்டார்கள். ஜப்பானிய ஸாமுராயர் தங்கள் நாட்டைவிட 20, 30 மடங்கு பெரிதான ருஷிய நாட்டு ஜனங்களை இரண்டு வருஷங்களில் வென்று, அழியாப்புகழ் தேடிக்கொண்டார்கள். நம்முடைய முன்னோர்களும் வீரத் துறைகளில் தங்களுக்கு யாரும் நிகரில்லை என்று சொல்லும்படி நடந்து கொண்டார்கள். நீங்களும், உங்கள் பிள்ளைகளை சிவாஜி போலவும், ஹைதர் ஆலி போலவும், பிருதிவிராஜன் போலவும், நாபோலியன் போலவும், வேஸ்பாரியைப் போலவும், தேசிங்கைப் போலவும் பிரகலாதனைப் போலவும், துருவனைப் போலவும், குருகோவிந்தன் புத்திரரைப் போலவும், தயாநந்த ஸரஸ்வதிபோலவும், நிர்ப்பயர்களாய், தைரிய லக்ஷ்மி பிரசன்னர்களாய் இருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு வளர்த்தீர்களானால், நாட்டில் தீரம் பெருகும் ; உங்களுக்கும் வீரத்தாய்மார் என்ற பெயருண்டாகும்."

மக்களை உத்தமர்களாக வளர்ப்பதே பெண்கள் சமூக முன்னேற்றத்திற்காகச் செய்ய வேண்டிய பெரிய வேலை. டாக்டர் பெசண்டு அம்மாள் ஒரு சந்தர்ப்பத்தில் கூறியிருப்பதாவது:—"மக்களைப் பேணும் மேலான கடமையைப் பெண்கள் சரிவர நிறைவேற்றுவிட்டால், புருஷர்கள் எவ்வளவு தைரியசாலிகளா யிருந்தாலும் சரி, அவர்கள் ஒரு நாளும் ஸ்யேச்சை யடையமாட்டார்கள்."

நன்னெறி, சுதந்தரம், தைரியம் ஆகிய குணங்கள் மாதர்களின் பாத கமலங்களில் சரணமடைந்து கிடக்கின்றன என்று உலகப் பெரியார்களெல்லாம் ஒரு முகமாக அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகையால் மக்களைப் பேணும் விஷயத்தில் இந்திய மாதர்கள் பிரத்தியேக கவனம் செலுத்த வேண்டும்.

---

### வேசியை விரும்புவோர்க்கு

1. மனையவள் விரோதமொன்று
2. மாதவன் விரோத மிரண்டு
3. தனமது விரயம் மூன்று
4. சகலரும் நகைத்தல் நான்கு
5. தினந்தினம் லஜ்ஜை ஐந்து
6. தேகத்தில் பிணியோடு ஆறு
7. வினையுறு நரகம் ஏழு

இவை மட்டுமல்ல. இன்னும் எத்தனையோ!

# "கோயிலா? கொலைக்களமா?"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

"ஆலயந் தொழுவது சாலவும் நன்று"—என்பது ஔவைப்பிராட்டியின் அமுதமொழி. இவ்வுலகிலுள்ள ஏனைய எப்பிறவிகளிலும் மானிடப் பிறவியே சாலச் சிறந்ததென்பது சான்றோர் துணிபு. எங்ஙனமெனின், தன்னலமொன்றையே இன்றியமையாததாகக் கொண்டு, தமது வாழ்க்கையை நடாத்திச் செல்வதோடு ஒருப்படாது, தன்னைச் சார்ந்தார்க்கும், வாயினாற் பேசி தத்தங் குறைகளை முறையிட முடியாத மிருகங்கள் முதலியவைகட்கும் இயன்றவரை உதவிபுரிந்து அருளையும் குறிக்கொள்ளுதலின் என்ப. இதுகொண்டே பகுத்தறிவற்ற விலங்குகள் முதலியவற்றினும் பகுத்தறிவுற்ற மானிடன் உயர்ந்தவனாக மதிக்கப்படுகின்றான். இவ்வாறன்றி, அன்பு என்பது சிறிதுமின்றி தன்னலத்திலேயே கண்ணுங்கருத்துமாயிருந்து, கேவலம் உண்டு உடுத்து உறங்குவதிலேயே தமது வாழ்நாளை வீணே கழிக்கும் மக்கள் மனித உடல் தாங்கி உலவினும் 'மானிடர்' என்று அழைத்தற்கு அருகராவரோ? "அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு—என்புதோல் போர்த்த உடம்பு"—என்பது தமிழ் மறை.

மற்றும், "மனித உடல் ஒன்றில்தான் இறைவன் உறைகின்றான்; ஏனைய பக்தி முதலியன வாய்க்கப்பெறாத விலங்குகள் முதலியவற்றின் உடல்களில் கடவுள் விளங்கவில்லை" என்பதில்லை. உயர்திணை முதல் அஃறிணை ஈறாக உள்ள எல்லாவற்றிலும் 'அண்டபகிரண்டமும் அடங்க ஒரு நிறைவாகி' 'பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற பரிபூரணானந்த' மயனாவன் பகவான். "எவ்வுயிரும் பராபரன்றன் சந்நிதியதாகும். இலங்கும் உடல் உயிரனைத்தும் ஈசன்கோயில்"; என்பது முதுமொழி. ஆதலின், தத்தம் நலங்களைப் பேணுதற்கென நாசாதி அவயவங்களும் அறிவாற்றலும் படைத்த மக்கள்பால் செலுத்தும் அன்பினும், தத்தங் குறைகளை முறையிடுதற்கென வாயில்லாத விலங்குகள் முதலியவற்றினிடத்திற் செலுத்தப்படும் அன்பே எவ்வாற்றானும் சிறந்ததாகும்.

மாடு கோழி முதலியவைகளிடத்தினின்றும் பெரும்பயனைப் பெற்றுக் கொண்டு, அவற்றின் உழைப்பின்பயனாகப் பெற்ற ஊதியத்தில் மிகச் சிறியதொரு பகுதியைக் கொண்டு அவற்றிற்குத் தீனி முதலியன இடுமளவில் நின்றுவிடுவது உண்மை அன்பாகாது. அவற்றின் உழைப்பால் அடைந்த இலாபத்திற்கேற்றவாறு அவ்வவற்றின் போஷணைக்குத் தாராளமாகப் போதியவளவு தீனி முதலியன போட்டு போஷித்தல் வேண்டும். இது சாதாரண அன்பாகும். நீண்டகாலம் நன்கு உழைத்துத் தளர்வெய்திய காலத்

தில், பெரும்பயன் தரப் போதிய ஆற்றலில்லாத பசுக்கள் எருதுகள் முதலி யவற்றை அவற்றின் விருத்தாப்பிய காலத்திலும் செய்ந்நன்றி மறவாது செவ்வனே போஷித்தல் வேண்டும். இஃதே சிறந்த அன்பாகும். இவ்விரு வகையுமன்றி, மனமொழிமெய்களால் மானிடசமூகத்திற்கு எவ்வகைத் தீமையும் இழையாத ஏழைப்பிராணிகளை, பகுத்தறிவையும் அன்பையும் சிறப்பாக வளர்க்கத்தக்க மனிதப்பிறவி தாங்கிய மக்கள் சிறிதும் கருணையின்றி அவற்றின் கழுத்துகளிற் கத்தியைவைத்து அவை கதறக் கதற அறுத்தல் எத்துணைப் பெரியதொரு கொடுமையாகும். அவ்வளவோடமையாது, கருணை வடிவினறுய கயிலைநாயகனது பரிவாரங்களும் பக்தர்களும் அருட்சத்தியின் அம்சங்களுமான மாரியம்மன் முதலிய சில்லரைத் தெய்வங்களின் பெயர்களைச்சொல்லி, இருகால்விலங்குகளென்னத் தக்க மாக்கள், நாற்கால்விலங்குகளையும் பறவைகளையும் பலியிட்டுமகிழ்வது எத்துணைப் பெரியதொரு பேதமையாகும்! எவ்வுயிர்க்கும் இறைவனும் ஈசன் திருமுன்பு, இத்தகைய மாக்கள் எப்பாடு படுத்தப்படுவரோ? "என்பிலதனை வெயில்போலக் காயுமே அன்பிலதனை அறம்"—என்பது பொய்யாமொழியன்றோ?"

மற்றும்,"ஓருயிர்தன்னைக் கோறல் செய்தோர்கள் உயிரினை அவ்வுயி ரெய்திச்—சோர்வுறக் கொல்லு மாதலால் கோறலாதல் மற்றொழிந்திடல் வேண்டும்"—என வரும் இலிங்கபுராண மெய்ம் மொழிக்கேற்ப எவரால் எவ்வுயிர் கொல்லப்படுகிறதோ அவரை அவ்வுயிர் இயமனுலகிலேனும் மறு பிறவியிலேனும் வதைத்துப் பழிக்குப்பழி வாங்காதிராது என்பது தெளியக் கிடக்கின்றதன்றோ? மிகப்பல மிருகங்கள் முதலியவற்றைக் கொன்று ஆயிரம் யாகங்கள் செய்வதைக்காட்டினும், பலி பலி என்று சில்லரைத் தெய்வங்களின்மேற் சாக்கிட்டு எளியபிராணிகளைக் கொல்வித்து பூசைகள் பல போடுவதைக்காட்டிலும், ஒரு ஏழைப்பிராணியைக் காப்பாற்றி வளர்த்தல் எத்துணைச்சிறந்ததாகும்! இதனாலன்றோ, தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் "அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்—உயிர் செகுத்துண்ணாமை நன்று"—என அருளிச் செய்தனர். புவனியெல்லாம் போற்றும் புத்தர் பெருமானும், ஆயிரக்கணக்கான ஆடுகளை வேள்வியில் மாள்வித்து அரும் பெரும் பாவம் அடையவிருந்த அரசனைத் தடுத்துத் திருத்தி ஆட்கொண்டருளினரன்றோ! ஆதலால், அவ்வரசர்க்கு விளையவிருந்த பெரும்பாவம் அகன்றதேயன்றி எத்தகைய தோஷங்களேனும் எய்தியதுண்டோ? ஒரு பிராணியை அழித்தல் எளிதே! ஆனால், அதனைக் காப்பாற்றுதலும் வளர்த்தலும் எத்துணை அருமையும் இனிமையுமென்பதை சிறிதே சிந்தித்துப் பார்ப்பாராயின், எவரும் உண்மை தெளியப்பெறுவர்.

மற்றும், நம்முடலினுள்ளே உள்ள அக ஆலயத்தை விட்டு, கோயிலும் கோபுரமும் கூடிய புற ஆலயத்தைக் கட்டி ஆண்டவனை வழிபடுவது எதற்காக? பேரறிவு விளங்கப் பெறுதாரும்; ஒருங்கு திரண்டு கலந்து கடவுளைப்

*

புகழ்ந்து உண்மையன்பைப் பெருக்கிக் கொள்ளாதாரும்; "எவ்வுயிரும் நீங்கா திறையும் உறைசிவனென்று—எவ்வுயிர்க்கும் அன்பாயிரா" தாரும் உய் வதற்கேயன்றோ ? முன்னோர் கோலிய நன்முறைகட்கு முற்றிலும் எதிர் மாறாக நடந்துகொள்வதுதான், ஆலய வழிபாட்டுக்கு அழகாவதோ ? அன்பின் பெருமையைச் சிறிதும் உணராது. சீவகாருணியம் சிறிது மின்றி கோயிலைக் கொலைக்களமாக்கிய கொடியார்க்கும் கருணை வடிவினனாய இறை வன் இரங்குவானோ ?

"என்பே விறகா இறைச்சி அறுத்திட்டு
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்,
அன்போடுருகி அகங் குழைவார்க் கன்றி
என்போன் மணியினை எய்தவொண்ணாதே"

என திருமூலர் அருளிச்செய்தனரன்றோ !

எத்தகைய தெய்வமும், 'எனக்கு இறைச்சி படைத்திடுக' என்று கேட்ப தில்லை. தசை (மாமிச) ,உணவில் நசை (விருப்பம்) உள்ள தயையற்ற தறு கணாளர்களாம் பூசாரிகள் முதலினோரே பேதமை உலகை பயமுறுத்தி வஞ் சித்து வருகின்றனர். ஆவேசம் வந்துவிட்டதாக நடித்து, ஆர்பாட்டம் செய்வ தெல்லாம் வெறும் வேடமேயன்றி வேறில்லை. எவ்வளவோ காலம் அகங் கசிந்து ஆடிப் பாடி அழுது தொழுது நெஞ்சுருகி நிற்கும் மெய்யன்பர்கள் கூட, ஆண்டவனை நேரிற் காண இயலாது புலம்பிப் புலம்பிச் சென்றுளர். அத்தகைய மெய்யன்பர்கட்கே எளிதில் தனது காட்சியை வழங்காத இறை வன், பலதிறப்பட்ட பிழைகள் நிரம்பிய வாழ்க்கையுடையராய் ஊனிலும் கள்ளிலும் உவப்புடையரான ஆவேசக்காரர்களிடம் எளிதில் ஆவிர்ப்பவித்து விடுவனோ? இத்தகைய பேதைமைச் செயல்கள், நமது செந்தமிழ் நாட்டைக் குறைகூறித் திரிவோர்க்கு பெரிதும் துணைசெய்கின்றன. அங்ஙனம், எத் தெய்வமேனும் மிருகபலியை உவந்துகேட்குமாயின், அஃது உண்மைத் தெய்வமுமாகாது. பண்டைகாலத்தில், அரசர்களுக்குள் அமர்விளையுமுன் தத்தமது வெற்றியை வேண்டி, போருக்குத் தலைமைபூண்ட துர்க்கை முத லிய வீரதேவதைகட்கு களப்பலியூட்டி சமர் தொடங்கல் முன்னோர் முறை யாகும். அவ்வாறன்றி, அன்புநிலையங்களாம் ஆலயங்களில் ஏழைப்பிராணி களாய விலங்குகள் முதலியவற்றைப் பலியிடுவதென்பது வழக்கத்திலிருந்து வந்ததென்பதை வலியுறுத்தப் போதிய சான்றுகளில்லை. மற்றும்,

மக்களுக்கு இயல்பான குணங்கள் மூன்று. அவைதாம் தாமத இராசத சாத்துவிக மென்பன. இம்மூன்றனுள், முன்னிரண்டும் மக்களை வெம்மையிற் புகுத்தி, இம்மையிலும் மறுமையிலும் இடுக்கண்கள் பலவற்றைக் கூட்டுவ தாகும். ஆதலின், மக்களை செம்மை நெறியிற் செலுத்தி ஆண்டவனது திரு வருளுக்கும், இவ்வுலகிலும் அவ்வுலகிலும் இன்பமடைவதற்கும் வழிகாட்டும் சாத்துவிக நெறியே, மானிடவாழ்க்கையின் நோக்கத்தைச் சிறந்த முறையில்

நிறைவேற்றுவதாகும். அதுகுறித்தே சுத்த சத்துவமான அருட்பெருஞ் சோதியை அடைந்து உய்வதற்குரிய சாத்துவிக வளர்ச்சி நெறிமுறைகளையே, சாத்திரங்கள் பெரிதும் வலியுறுத்திச் சாற்றுகின்றன. அந்நன்னெறியை அகற்றி அசப்புற வாழ்வை இரக்கமற்ற கொடுமைகளே நிறைந்ததாகச் செய்வதற்கும், ஆண்டவனது தண்டனையை அடைவதற்கும் காரணமாய் நிற்பனவும், வாயில்லா ஏழைப் பிராணிகளை வதைசெய்யத் தூண்டுவனவுமாய தாமத இராசத தன்மைகளைத் தவிர்த்தாலன்றி, ஆண்டவனது அருளுக்கு இலக்காதல் அரிதென்பதை கருத்திலிருத்தி உயர்நெறிபற்றி யொழுக ஒவ்வொருவரும் முன்வருதல் வேண்டும்.

இதுகாறுங் கூறியவற்றால், தன்னலமொன்றையே பேணுவதற்கென்றே மனிதப் பிறவி அளிக்கப்பட்டதன்று என்பதும், இறைவன் எவ்வுயிரிலும் இருத்தலின், எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி இரங்கி வாயில்லாப் பிராணிகளிடத்திற் காட்டும் கருணையே சாலச் சிறந்ததென்பதும்; எவ்வகையிலும் மனிதர்க்குத் தீமைவிளைவியாத ஏழைப்பிராணிகளை, இரக்கமின்றி கொன்று குவித்தலினும் சிறந்த கொடுமை மற்றொன்றுமில்லை யென்பதும்; ஒருவர் ஓருயிரை வீணே வதைப்பாராயின், அவ்வுயிரே அவரைப் பிற்காலத்தில் வதைத்து பழிக்குப்பழி தீர்த்துக்கொள்ளுமென்பது சாத்திரக்கொள்கை என்பதும்; ஆயிரக்கணக்கான உயிர்களை பலியிட்டு மகிழ்வதினும், ஒரு ஏழைப்பிராணியை உள்ளன்போடு போஷித்து வருதல் சிறந்ததென்பதும்; ஒருவர்க்கொருவர் கலந்து மெய்யன்பை வளர்த்து அன்பு மயமாம் ஆண்டவனை அறிந்திடு முயன்றிடற்காக ஆலயவழிபாட்டுமுறை கோலப்பட்டதேயன்றி, இராசத தாமத குணங்களை வளர்த்து இருமையிலும் இழிபடைவதற்காக ஏற்படுத்தப்பட்டதன்று என்பதும்; உயிர்ப்பலி தருமாறு உண்மையில் எத்தெய்வமும் கேட்பதில்லை என்பதும்; அவ்வாறு உயிர்ப்பலி கேட்கப்படுவது பூசாரிகளின் வஞ்சனையே என்பதும் பிறவும் ஒருவாறு விளக்கப்பட்டன. ஆதலின், கருணைவடிவினனாகிய கடவுளது திருவருளுக்கு ஆளாவதே மானிடவாழ்க்கையின் சீரிய நோக்கமாதலின், எவ்வுயிரிலும் ஈசன் இருப்பை உள்ளத்திருத்தி உயிர்ப்பலி வழக்கத்தை ஒழித்து, அன்பினை வளர்த்து உயர்நெறி கடைப் பிடித்து ஒழுகி, இம்மையிலும் மறுமையிலும் அனைவரும் நன்மையடைவார்களாக.

> "நலிதரு சிறிய தெய்வமென்றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப்
> பலிதர ஆடு பன்றி குக்கிடங்கள் பலிக்கடா முதலிய உயிரை [குற்றேன்
> பொலிவுறக் கொண்டே போகவுங்கண்டே புந்திநொந்து உள்நடுக்
> கலியுறு சிறிய தெய்வவெங்கோயில் கண்ட காலத்திலும் பயந்தேன்"
>
> துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்தொடங்கியபோதெலாம்
> [பயந்தேன்
> கண்ணினாலையோ பிறவுயிர்பதைக்கக் கண்டகாலத்திலும் பதைத்தேன்
> மண்ணினில் வலையுந் தூண்டிலும் கண்ணிவகைகளுங் கண்டபோ
> [தெல்லாம்
> எண்ணி என்னுள்ளம் நடுங்கிய நடுக்கம் எந்தைநின் திருவருளறியும்."
>
> திருவருட்பா.



# வைணவம்

## திருமங்கை ஆழ்வார் வைபவம்.

(639-ம் பக்கத் தொடர்ச்சி.)

திரிசிரபுரம், தேசீயக் கலாசாலைத் தமிழாசிரியர்
ஸ்ரீமுகம் வே. வரதராஜையங்கார் எழுதியது.

அதன்மேல் திருமங்கையாழ்வார் திவ்ய தேச யாத்திரை செய்யப் புறப் பட்டு, பதரிகாச்சிரமம், சாளக்கிராமம், நைமிசாரண்யம், சிங்கவேள் குன்றம், திருவேங்கடம் ஆகிய வடநாட்டுத் திருப்பதிகட்குச் சென்று அந்தந்த க்ஷேத்திரங்களில் எழுந்தருளியுள்ள பெருமானை மங்களாசாஸனஞ் செய்து, பாசுரங்களருளிச் செய்தனர். பின்பு, சான்றோருடைய தொண்டை நன் னாட்டை யடைந்து திவ்ய தேசங்களைச் கண்கொள்ளக் கண்டு களிகூர்ந்த வண்ணம் திருநின்றவூருக்கு வந்தார். அந்த க்ஷேத்திரத்தி லெழுந்தருளியுள்ள பத்தராவிப் பெருமாள் ஆழ்வாருக்கு சேவை சாதிக்காமல் பிராட்டியார்பால் காதலுற்று விளையாடி யிருக்க, திருமங்கை மன்னர் நேராக திருவல்லிக் கேணிக்கேகி ஆங்கெழுந்தருளியிரா நிற்கும் பெருமாள் ஐவரையும் தரிசித்துக் கொண்டு, அப்பால் அங்கிருந்து திருநீர்மலையை யடைந்து அப்பெருமாளிடத் திலே மிகுந்த பக்தி பூண்டு திருப்பாசுரம் அருளிச் செய்தார். அதன்மேல் ஆழ் வார் திருக்கடன் மல்லையை யெய்தி பெருமாளைச் சேவித்திருக்கும்போது திருநின்றவூர் பெருமாள் பிராட்டியாரின் தூண்டுதலின் பேரில் ஆழ்வாரால் பாடல்பெற்றுவப்பான் வேண்டித் திருக்கடன் மல்லைக்குத் தாமே எழுந் தருளி சேவை சாதித்தருளினார். கலியனார் அப்பெருமாளையும் சேவித்து அவ் வூர்ப்பதிகத்திலேயே "நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார் சோலைக், காண்ட வத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தானைக், கண்டது நான் கடன் மல்லைத் தல சயனத்தே" என்று மங்களாசாஸனம் செய்தார். இத்திவ்ய தேச யாத் திரையில் பரகாலர் பெரிய திருமொழியைப் பாடினார் என்பர்.

இங்ஙனம் ஆழ்வார் தொண்டை நாடு நடுநாட்டிலுள்ள திவ்ய தேசங் களைச் சேவித்துக்கொண்டு, சோணாட்டைச் சார்ந்து தில்லை நகர் திருச்சித்திர கூடத்தைப்பாடி சீர்காழி வழியே எழுந்தருளும்போது, ஆழ்வாருடன் வரும் பரிசனங்கள் அவரைச் சிறப்பித்துப் பல பிருதாவளிகள் சொல்லிக் கொண்டு சென்றார்கள். அப்பொழுது சீர்காழியில் எழுந்தருளி யிருந்த காழியப்ப

வள்ளலாரான திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் அடியார்கள், ஆழ்வாரோடு விருது ஊதிச் செல்லும் அடியார்களைத் தடுத்தார்களென்றும், அப்பொழுது ஆழ்வார் சம்பந்தர் வீற்றிருந்த மடத்திற்குச் சென்று அவரைக் கண்டு வாதிட்டு அவர் வினவியதற் கிணங்க

ஒருகுறளா யிருநில மூவடிமண் வேண்டி
யுலகனைத்து மீரடியாலொடுக்கி யொன்றுந்
தருகவென மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் றனைவீர் தக்க சீர்த்தி
அருமறையின் றிரளைன்கும் வேள் வியைந்து
மங்கங்களவையாறு மிசைகளேழுந்
தெருவின் மலிவிழாவள முஞ்சிறக்குங் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே.

என்று தொடங்கி சமீபத்திலுள்ள காழிச் சீராம விண்ணகர மென்னும் திவ்ய தேசத்திலுள்ள தாடாளப் பெருமாளைப் பற்றிப் பாடினரென்றும், அதற்குகந்த காழியப்ப வள்ளலார், தமது வேலாயுதத்தை ஆழ்வாருக்குச் சமர்ப்பித்தாரென்றும், இந்நிகழ்ச்சி தோன்ற ஆழ்வார்,

செங்கமலத் தயனனைய மறையோர் காழிச் சீராம விண்ணகரின் செங்கண்மாலை, அங்கமலத் தடவயல் சூழ் ஆலிநாடனருள் மாரி யராட்ட முக்கியடையார் சீயங் கொங்குமலர்க் குழலியர் வேண்மங்கை வேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன, சங்கமுகத் தமிழ் மாலை பத்தும் வல்லார் தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர்தாமே. என்ற பாசுரத்தோடு பயன்கூறி முடித்தாரென்றுங் கூறுவர்.

அதன் பின், ஆழ்வார் திருவாலி திருநகரி, திருநாங்கூர் முதலிய திருப்பதிகளைச் சேவித்துக் கொண்டு, திருவிந்தளூரை யடைந்தார். அப்பொழுது திருவிந்தளூர் பெருமாள் ஆழ்வாருக்கு ஒருமுறை சேவை சாதித்து மறைய, அவர் அதற்கிரங்கி மனக்குறைபாடுடையவராய் "வாசி வல்லீர் இந்தளூர் வாழ்ந்தேபோம் நீரே" என்று பாட, எம்பெருமான் இரங்கி நிரந்தரமாக நின்று சேவைதர, பொங்கிய மனதுடன் சேவித்துப் பாடி, அவண் நீங்கி வழியிலுள்ள திவ்ய தேசங்களை யெல்லாம் சேவித்துக்கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலை யடைந்தார். ஸ்ரீரங்கநாதனிடத்தில் மற்ற எல்லாத் திருப்பதிகளிலும் எழுந்தருளியுள்ள மூர்த்திகளை விட அதிக ஈடுபாடுடையவராய்ப் பாடி இன்புற்றிருக்க, ஸ்ரீரங்கநாதனும் ஆழ்வாருடைய அடிமைத் திறத்தை வியந்து 'தமது விமானம், மண்டபம், கோபுரம், பிராகாரம்' முதலிய கைங்கரியங்களைச் செய்யும்படி நியமித்தருளினர். அதற்கிணங்க ஆழ்வார் தமது மந்திரிமார் நால்வருடன், கோயில் திருப்பணிக்கு வேண்டிய திரவியத்தின் பொருட்டு ஆலோசிக்கும்போது, அம்மந்திரிகள் நாகையில்

பொன்மயமானதோர் பௌத்த விக்ரஹம் ஆங்கு பௌத்தர்களால் அமைக்கப் பெற்ற ஆலயத்தின் கண்ணுளதென்றும், அதைத் திருட்டு செய்து கொண்டு வந்தால் பொருள் முட்டுப்பாடு ஏற்படாதென்றும் கூறினர். பரகாலரும் மகிழ்ந்து தம் பரிவாரங்களுடன் நாகையை நோக்கிப் புறப்பட்டார். நாகையில் அதி விசித்திரமான சித்திர வேலைப்பாட்டுடன் அமைந்திலங்கும் அப்பௌத்த ஆலயத்தினுள் புக வழியேதும் இல்லாமை கண்டு திகைத்து சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவ்வாலயத்தின் விமானத்திலுள்ள சிகரமானது சக்ராகாரமாய் யந்திர விசேஷ முடையதாய் இடைவிடாமல் சுழன்று கொண்டே யிருந்தது. அதை நிறுத்துதல் பொருட்டு, வாழைத் தண்டுகளை மெல்ல அதன்மீது ஒன்றொன்றாய் எறிய, சக்கரத்தின் சுழற்சியிலே அவ்வாழைத் தண்டின் நார்கள் சுற்றிக்கொள்ள அப்பொழுது நின்றுவிட்டது. பிறகு ஆழ்வார் தமது பரிவாரத்தி லொருவரை உள்ளே யனுப்பினார். அவர் உள்ளே சென்று பொன்மயமான அச்சிலையைக் கவர யத்தனிக்கும்போது, அது மந்திர வலிமையால் இடம் பெயர்ந்து, அச்சிகரம் முற்றிலுந் திரிந்து அவர் கைக்கு அகப்படாமல் ஓட, அவர் கலங்கி வெளியிலிருந்த ஆழ்வாரை நோக்கினார். அக்கணமே ஆழ்வார், அவ் விக்கிரஹத்தை அபரிசுத்தமாக்கிவிட, அது பலங் குன்றி,

> "ஈயத்தாலாகாதோ விரும்பினாலாகாதோ
> பூயத்தான் மிக்கதொரு பூதத்தாலாகாதோ
> தேயத்தே பித்தளை நற் செம்புகளாலாகாதோ
> மாயப்பொன் வேண்டுமோ மதித்தென்னைப் பண்ணுகைக்கே"

என்று பிரலாபித்துக்கொண்டே விழுந்தது. பின்பு, ஆலிநாடர் அதை எடுத்துக்கொண்டு வந்து புடமிட்டு உருக்கி விற்றுப் பொருள் கொண்டு, ஸ்ரீரங்கநாதன் நியமனப்படி கோயில் திருப்பணிகளனைத்தையும் குறைவறச் செய்து முடித்து, மதில் எடுக்குமளவிலே, தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலைத் திருநந்தவனம் நேர்பட, சாஷ்டாங்கமாக அத் திக்கு நோக்கிச் சேவித்து, மதிலை விலக்கிக் கட்டி முடிக்தார். இங்ஙனம் பெரியகோயில் திருப்பணிகளனைத்தையும் குறைவின்றிச் செய்து முடித்த பின்னர், மங்கை வேந்தர், பெருமாளிடத்தில் விடை பெற்றுக்கொண்டு திவ்ய தேச யாத்திரை செய்யப் புறப்பட்டு, தென் திருப்பேர், நந்திபுர விண்ணகரம், திருவிண்ணகரம், முதலிய க்ஷேத்திரங்களை மங்களாசாஸனம் செய்து, திருநறையூரை யடைந்தார். திருநறையூர் நம்பி விஷயமாய் நூறுபாசுங்களை யருளிச் செய்து விடைகொண்டு, திருச்சேறை, தேரழுந்தூர், சிறுபுலியூர் என்னும் தலங்களின் வழியாக திருக்கண்ணமங்கையை எய்தி, ஆங்கெழுந்தருளியுள்ள எம்பெருமானைப் பாடி, மகிழும்போது, திருநின்றவூர் பத்தராவிப் பெருமான் முன்பு தாம் ஒரு பாடல் பெற்றதில் திருப்திப்படாமல், அங்கு வந்து சேவை சாதிக்க, ஆழ்வார் "நின்றவூர் நின்ற நித்திலக் கொத்தினை...கண

மங்கையுள் கண்டு கொண்டேன்" என்று அவரையும் சேர்த்துப் பாசுரம் அருளிச் செய்தார்.

பின்னர், திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை முதலான சோணாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக் கொண்டு, திருப்புல்லாணி, திருக்குறுங்குடி என்னும் பாண்டிய நாட்டுத் தலங்களையும், திருவல்லவாழ் என்னும் மலைநாட்டுத் திருப்பதியையும், தென்னாட்டில் திருமாலிருஞ் சோலைமலை, திருக்கோட்டியூர் முதலியவற்றையும், வழியிலுள்ள ஏனைய க்ஷேத்திரங்களையும் சேவித்தவராய், எம்பெருமானின் அர்ச்ச விபவாவதாரங்களை மனமுருகிப்பாடிப் பெரிய திருமொழியை முடித்தார்.

அதன்மேல் பக்தி பரவியெழ மற்றும் ஐந்து பிரபந்தங்களை அருளிச் செய்து, திருவரங்கத்திற் செழுந்தருளி, அவர் சந்நிதியில் திருநெடுந்தாண்டகத்தைத் தேவகானத்திற் பாட, எம்பெருமான் உளமுவந்து "உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும்" என்று நியமிக்க, ஆழ்வார் "முன்பு தேவரீர் நம்மாழ்வார் வாயிலாக வெளியிட்டருளிய தமிழ் வேதங்கள் நான்கையும் மார்கழித் திங்களில் தேவரீர் கண்டருள்கின்ற அத்யயன உற்சவத்தில் கீர்வாண வேதங்களோடு பாராயணம் செய்யுமாறு அருளிச் செய்ய வேண்டும்" என்று வேண்ட, பெருமாள் அவ்வரத்தை அளித்தருளினார்.

அங்ஙனமே, ஆழ்வார், விக்ரஹ ரூபமான நம்மாழ்வாரை ஆழ்வார் திருநகரியிலிருந்து அவ்வுற்சவத்திற்கு எழுந்தருளப் பண்ணி, உபயவேத பாராயணங்களை ஒழுங்காய் நடத்தச் செய்து, விழா முடிந்ததும் ஆழ்வாரை மீண்டும் ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளப் பண்ணினார்.

இவ்விதம், ஒவ்வொரு வருடமும் அத்யயனோற்சவத்தை நடத்தி வரும்படி ஏற்பாடு செய்துவிட்டு, மகேந்திரகிரிக்குப் பக்கலிலுள்ள சித்தாஸ்ரமம் என்னும் திருக்குறுங்குடிக்கு வந்து, அங்குள்ள நம்பியின் அழகில் ஈடுபட்டு அங்கேயே நிரந்தர வாசஞ் செய்வாராய், குமுதவல்லியாருடன் விரக்தராய் சிலகாலம் யோக நிஷ்டையில் எழுந்தருளி யிருந்து நூற்றைந்தாம் ஆண்டில் எம்பெருமானுடைய திருவடிகளை சாஸ்வதமாகச் சேர்ந்தார்.

ஒருவர்:—ஆனையைப் பூனை விழுங்கி ஏப்பமிட்டதாம். பூனையைத் தேனீ எடுத்தேகிற்றும். என்ன கலிகால விந்தையிது என்றார்.

மற்றொருவர்:—தங்களுக்கு அதன் சரியான அர்த்தம் தெரியாது போலும்.

ஆனை:—ஆ+நெய்=பசுவின் நெய்யை பூனை விழுங்கி ஏப்பமிட்டது.

பூனை:—பூ+நெய் தேனை தேனீ எடுத்தேகிற்று என்று விளக்கினார்.

## சங்கம்.

த. க. மு. அப்துல்மஜீது.

சங்கமென்ற பதம் பல்வேறு பொருள்களில் வழங்கப்படுமாயினும் இவண் நுண்ணுணர்வுடைய அறிவாளர் பலர் குழுமி ஆராய்ச்சி செய்யுங் கழகத்திற்கே சங்கம் என்று கூறுதும்.

நம் பழந்தமிழ் நாட்டில் பல நூற்றாண்டுகளுக்குமுன் முதல் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என மூச்சங்கமிருந்து எந்தாய்த் தமிழ் மொழியில் நல்லிலக்கிய 'லக்கண தருக்க முதலிய செந்தமிழ் நூற்கள் ஆக்கப்பட்டிருப்பதாக இக்காலத்திலும் முன்னைய சங்க நூற்களென்று பெருமாண்புற்று விளங்கும் சீவக சிந்தாமணி தொல்காப்பியம் முதலிய பிறவுமுள்ள பெருங்காப்பியத்திளின்றும் தெளிந்தறிகின்றோம்.

நம் பழந்தமிழ் நாட்டின் தொன்மையும், கல்வி, இசை, ஓவியம், மருத்துவம், வானாராய்ச்சி, வீரம், அரசியல், வாணிபம் மற்றையவைகளிற் மக்கள் விழுமியவர்களாய் வதிந்துவந்தன ரென்பதற்குரிய காட்டுகளை நம் பழந்தமிழ் நூலகத்திலுந்தி உய்த்துணர்ந்தாலன்றி அறிதலரிது.

இப்போது நந்தமிழ்த் தாயகத்தில் முன்னையதொத்த சங்கங்களில்லாமையாலும், பன்னூறு ஆண்டுகளாக நந்தமிழ் நாடு உரிமையிழந்தமையாலும் மக்கள் நாட்டுக் கல்வியல்லாத அந்நியக் கல்வியை தனதென்றை நாடிப் பயின்று வருதலானும் நாட்டில் பிற்காலத்தில் நல்லிலக்கியங்கள் தோன்றவில்லை.

சரித்திர ஆராய்ச்சியின்படி பண்டைய காலத்தில் குன்றிக்கிடந்த மேனாட்டார்கள் இதுபோழ்து குன்றெனத் தோன்றி உலகாள்வதும், தொழில் வியாபாரம் விவசாயம் முதலியவைகளில் நாளடைவில் பேராக்கம் பெற்று வருவதும் சங்கங்களின் பெரும்பணியேயாம். சிறிய நகரங்களிலும் ஆங்காங்கு அநேகச் சங்கங்களை நிறுவிப் பல்கலையாய்ந்துப் புதுப்புது நூதனக் காட்சிகளை நம்மவர் இறும்பூதுறத்தக்க ஆற்றிக் கீர்த்தி பெறுவதும் சங்கங்களின் துணையே யன்றி வேறில்லை. சில்லாண்டுகட்குமுன் சிற்றரசாயிருந்த ஜப்பானும் இப்போது வல்லரசாகத் தனது அரசியல் வாணிபம் கைத்தொழில் நாகரீகம் முதலியதி லீடுபட்டு ஞாயிறென மிளிர்ந்துகொண் டிருப்பதற்கும் காரணம் சங்கங்களின் ஊழியமென்றே நன்கு விளங்குகிறது.

இவ்வாறு ஒவ்வொரு நாட்டாரும் பற்பலத் துறைகளில் முற்போக்கெய்திவரும் இந்நாளில் நம் தமிழ் மக்கள் கல்வி, தொழில், அரசியல் முதலிய பிறவுமுள்ள முன்னேற்றத்தில் பிற்போக்காக இருந்து வருவது மிகவும்

விசனிக்கத் தக்கதேயாம். இவர்களின் உண்மையான நிலைமை இங்ஙனமிருக்குமாயின் நம்மவர்கள் யாண்டுதான் உரிமையாளராகவும், மேம்பாட்டுக் குரியவராகவு மாவர். ஒரு தேயம் பற்பலத் துறைகளிலும் முன்னேற்றமடைந்து மாண்புற வேண்டுமாயின், அத் தேயத்திலுள்ளா ரனைவரும் கல்வி, கேள்விகளிற் சிறந்து இலெளகீக வைதீக சாதனங்களைப் பெறுதற்குரிய பல சங்கங்களை நிறுவி அச் சங்கங்களின் ஒற்றுமையாலும் மற்றைய முன்னேற்றத்துக்குரிய ஊக்கமெனும் ஊர்தியிலுந்திப் பேறு பெறுவதை யோம்பிவரல் வேண்டும். இவண் பேறு என்பது செல்வத்தைக் குறித்தமையால் அச்செல்வம் நுண்ணுணர் உடைமையேயாம்.

> "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை
> பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்"
> "அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
> ரென்னுடைய ரேனு மிலர்"

என்னும் ஆன்றோர் கூற்றையோர்க. செல்வங்களெல்லாம் அறிவின் துணையாலே சம்பாதிக்கவும் காக்கவும் படுதலால் அறிவுடையாரே எல்லா முடையாரெனவும் அவையெல்லாம் முன்னரே யமைந்து கிடந்தாலும் அவை யழியாமைக் காத்தற்கும் அழிந்தவிடத்தே மீண்டுஞ் சம்பாதித்தற்கும் கருவியாகிய அறிவில்லாமையால் அறிவில்லாதவரை என்னுடைய ரேனுமிலர் என்றுங் கூறினர். இதனால் அறிவுடையாரே பெரியார் என்பது பெற்றாம்.

இத்தகை அறிவுடையோரால் நடாத்தப்படும் சங்கங்கள் பட்டின முதல் கிராமங்களீறாகவும் மலிந்திருத்தல் வேண்டும். மக்கள் தன் வேதனத்துக் குரிய வினையாற்றி எஞ்சிய ஞான்றை வாளாக்காது முன்னைய அறிவுடையோரது சங்கங்களில் அங்கம் பெற்று அவற்றின் துணையால் அறிவை ஊறச் செய்யும் நெறி நூற்களையும், இந் நிலவுலகின் நிகழ்ச்சியை எளிதில் உணர்த்தி வைக்கும் பத்திரிகைகளையும் உய்த்துணர்ந்து ஏனைய நாட்டாரைப்போல் கல்வி, வியாபாரம், விவசாயம், கைத்தொழில், அரசியல் முதலியவைகளி லீடுபட்டு உயர்நிலை யெய்தல்வேண்டும்.

இக்காலத்தில் கிராமங்களிலும் மற்றைய விடங்களிலும் வியவகார ஞானம் இன்னதென் றறிந்திராத பஞ்சாயக் கருத்தாக்களையும், கைக்கூலி வாங்கிக்கொண்டு ஒருதலைச் சார்பாக வழக்குரைக்கும் போலித் தலைவர்களையும், அனாதை யேழைகளின் ஆக்கத்தை நயத்தாலும் பயத்தாலும் வஞ்சித்து அபகரிக்கும் பேராசைப் பிரியர்களையும் காண்கிறோமல்லவா? இன்னோரன்ன கொடுஞ் செய்கைகளின் காரணத்தாலே ஆங்காங்கு கலகமும் பிளவுமுண்டாகி மக்களுள் உயிர்கட்கும் பொருள்கட்கும் பெரிய அழிவை உண்டாக்கிவிடுகிறது. நம்மால் நடாத்தப்படுஞ் சங்கங்களின் வாயிலாக இன்னவர்கட்கு நற்புத்தி புகட்டி வைப்பதோடு பஞ்சாயத்துப் பரிபாலன முதலிய பொறுப்பு வாய்ந்த வேலைகளைச் சங்கங்களின் சார்பாகவே நடாத்தி வரவேண்டும். நம்மவரில் வெகுபேர் நாங்கள் தலைமுறைத் தலைவனென்றும், பரம்பரைத் தலைவனென்றும் வேட்கையில் உரிமை கோலுகின்றனர். இவ்விடத்தில் நாம் தலைவனென்பதற்குரிய இலக்கணம் அறிவுடைமையே யன்றிப் பிறிதில்லை. ஒரு நாட்டைக் கோலோச்சிக் காக்கும் அரசன் அந்நாட்டு மக்களுக்குரிய நியாயமான வழியில் அரசுரிமை செலுத்திக்காக்க ஆற்றல் பெறாதவனாயிருந்தால்

அவ்வரசனை நீக்கி வேறொரு நல்லரசனை யேற்படுத்திக் கொள்ளப் பொது மக்களுக்கு உரிமை யிருக்கும்போது பரிபாலன ஞானமில்லாத பரம்பரைத் தலைவர்களையோ, தலைமுறைத் தலைவர்களையோ நாம் ஆதரிக்க வேண்டிய தேவையில்லை. நாட்டுக்கு நல்லரசில்லாதிருந்தால் அந்நாடு காடாகி விடுவது போல் நகரங்களுக்குரிய தலை மகனில்லாதிருந்தால் அந்நகரமும் நரகமாகி விடும். அவ்விடத்தில் ஒருபோழ்தும் அருள்நெறி மிளிராது. பணக்காரர்களா யிருந்தாலும், பணமில்லாதவர்களாகவே யிருந்தாலும் பொறுப்பு வாய்ந்த நியாய பரிபாலன நிர்வாக மனைத்தும் அறிவுடையோர்க்கே உரியது.

இத்தகைய அறிவுடையோரால் நடாத்தப்படுஞ் சங்கங்கட்கு பொது மக்களியாவரும் அங்கம்பெற்றுத் தமக்குள் இயல்புக்குத் தக்கவாறு பொருளீட்டி அப்பொருளைப் பொதுப்பொருளாக வருமானந் தரத்தக்க நல்வழியில் பண்படுத்தித், திக்கற்றவர்கட்கும் வைத்தியசாலைப் பாடசாலைகட்கும் அனாதை ஆண் பெண் கலியாணங்கட்கும், இறப்பு முதலிய புண்ணிய வழிகளில் செலவு செய்வதோடு கைத்தொழில், விவசாயம் இதர சிறுதொழில் செய்வோர்கட்கும் பேருதவி செய்து வருவோமானல் நாட்டின் வறுமைவிட்டகலுமென்பது நிச்சயம். மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் தான் சம்பாதிக்குஞ் செல்வத்தை மற்றையருக்கும் நல்வழியில் வழங்க அழியாப் பெரும்புகழ் பெறுவதே மனிதனது இலக்கணம். பொது நலத்திற் பற்றற்றவனது வாழ்க்கை "நடுவூரில் நச்சு மரம் பழுத்தற்று" என ஆன்றோர் வலியுறுத்தி யுள்ளார்கள். அறிவுடையாரால் நடாத்தப்படுஞ் சங்கங்களின் அணிகலமாவது மேற்கண்ட நன்னயங்களே.

சிலச்சில விடங்களிற் சங்கம், சபா, கூழாம், கழகம், அஸோஸியேஷன், ஸொஸைடி, கிளப், லைப்ரரி எனப் பிறவுமுள்ளப் பற்பலப் பெயர்களால் பகுக்கப்பட்டு வருமவைகளின் நிர்வாகத்தை உற்று நோக்குழி உண்மையான நோக்கத்தோடு உழைத்து வருபவை ஒரு சிலவேயாம். எஞ்சியக் குழூஉக்களெல்லாம் அவைத் தலைவரின் நன்மைக்கும், நிர்வாக சபையாரின் தன்னயத்துக்குமே ஏற்படுத்தப்பட் டிருப்பதாகத் தெரிகிறது. சிலர் ஒழுங்கற்றப் பாட்டுக் கச்சேரிகள், சதுர்க் கச்சேரிகள் நடாத்துகின்றனர். வேறு சிலர் தமது சபைகளைச் சொந்த விருந்தவையாகவும், மற்றுஞ் சிலர் தமது சங்கங்களிற் சூதாட்டம் கட்குடி வியபிசாரம் முதலியவைகளையே ஆதரித்து வருகின்றனர். சில பணக்காரர்கள் தமது காரியசித்தி பெறுவதற்குத் தம் வயப்பட்ட பலரை ஒருங்கு திரட்டி அவசரத்தில் சங்கமென்று தாபித்து தம் மனப் போக்கின்படி ஆட்சி செலுத்தி வருகின்றனர். ஐயகோ! இத்துணைப் போலிச் சங்கங்களின் மலிவால் பொது மக்களுக்குக் கிடைக்கும் ஊதியம் என்ன? இவைகளெல்லாம் சங்கமென்ற பெயரைக் கெடுக்கவந்த பங்கமென்றே சொல்லவேண்டி யிருக்கிறது. ஒருவன் அவையகத்தே அருத்தமில்லாத எண்ணிறந்த வார்த்தைகளைப் பேசுவதைக்காணக் கற்றறிந்த ஒருவனால் பேசப்படும் அருத்தம் பொதிந்த ஒரு வார்த்தையை யொக்காதல்லவா? அது போல் அறிவில்லார் நடாத்தும் அநேகச் சங்கங்களைக்காண அறிவாளிகள் நடாத்தும் ஒரு சங்கம் ஓரூரிலிருக்குமாயின் அவ்வூரின் குறைகளை இருளறுக்கும் ஞாயிறுபோல் அகலச் செய்யுமென்பது திண்ணம். அறிவுடையாரால் நடாத்தப்படும் சங்கங்களை ஆதரித்து நாளடைவில் நலந் திகழ்தற்குரிய நற்கருமங்களிற் ஈடுபட்டு இருமைப்பயனை அடையுமாறு எல்லாம்வல்ல முழுமுத லிறைவனை வழுத்துகிறோம்.

# ஹரிதாசர்.

சுதாரத்ன சே. கிருஷ்ணசாமி சர்மா.

ஹரிதாசர் ஓர் சிறந்த பக்தர். இவரைக் குறித்து பூர்வசரித்திரம் ஒன்றும் புலப்படவில்லை. ஆயினுமிவர் 16வது நூற்றாண்டில் அஸ்தினாபுரத்தின் சமீபத்தேயுள்ள இருள்கொண்ட ஆரண்யத்தே வசித்துவந்தார். இவரது பெற்றோர்களும், ஜாதி மதங்களும் ஒன்றும் தெரியவில்லை. ஆயினும் இவரை ஹரிதாசரென்பர். அவ்வாரண்யத்தே ஓர் ஆசிரமம் ஏற்படுத்திக்கொண்டு அதனுள் வசித்துவந்தார். சதா காலமும் கடவுளைத் துதிப்பதைவிட வேறொன்றும் செய்வதில்லை. சங்கீத சாஸ்திர மறிந்தவர். இவர் தம்பூர் மீட்டிப் பாடும்போது கேட்போர் பிரமை கொள்வரென்பது திண்ணம்.

இவருக்கு 'தான்ஸேன்' என்று ஓர் சீடரிருந்தார். இவர் தாசரை நாடி அவருக்குப் பணிவிடை செய்து சங்கீதத்தைக் கசடறக் கற்றார். தான்ஸேன் அக்பர் சக்கிரவர்த்தியின் ஆஸ்தானத்தே சங்கீத வித்வானாக இருந்து வந்தார். சக்கிரவர்த்தி தனக்கு வேண்டும்போழ்தெல்லாம் தான்ஸேனிடம் சங்கீதம் கேட்டு ஆனந்திப்பர். அவரது கானத்தைக் குறித்து பாதுஷா பன்முறை துதித்து வந்தார். அவர் துதிக்குந் தருணமெல்லாம் தான்ஸேன் "வேந்தனே! இதில் என்னுடைய மகிமை யொன்றுமில்லை. எல்லாம் குருவின் கடாக்ஷம். நானவரது பாததூளிக்கும் ஒப்பற்றவன். புகழ்யாவும் அவரைச் சேருமல்லாது என்னை அணுகா" என்று கூறுவர். இவைகள் தான்ஸேனின் நற்சீலத்திற்கு நிதர்சனமென்று கருதினாரே யன்றி அவ்வார்த்தைகளை கவனிக்கவில்லை பாதுஷா.

தான்ஸேன் இவ்வாறு கூறிவருகையில் ஓர்நாள் பாதுஷா அவ்வார்த்தைகள் மீது கவனம் செலுத்தலானார். கடவுள் ஹரிதாசரைச் சோதிக்கும் பொருட்டு பாதுஷாவிற்குப் பத்தி கொடுத்தார் போலும். பாதுஷா "தான்சேன்! நினது கீதங்களைக் கேட்டு ஆனந்தித்து துதிக்குங்கால் நீ நினது குருவைப் புகழ்கிறாயே. அவர் யார்? எங்கிருப்பவர்? அவரது இனிய கீதங்களைக் கேட்க நானருகனல்லனோ?" என்றார். அதற்கொன்றும் விடையளிக்கவில்லை தான்ஸேன். பாதுஷா எத்தனைமுறை கேட்பினும் பதில் இல்லை. உடனே கோபம் வந்துவிட்டது. அப்பொழுது தான்ஸேன் "வேந்தே அவர் இவ்விடம் வந்து பாடுபவரல்ல. சமயமுணர்ந்து தங்களை அவரிடம் அழைத்துச் செல்லுகிறேன்." என்றார். பாதுஷாவின் கோபமும் தணிந்தது.

ஒரு நாள் தான்ஸேன் பாதுஷாவுடன் தாசரின் ஆசிரமத்திற்குச் சென்று பாதுஷாவை வெளிப்புறமே நிற்கச்செய்து "நான் உட்சென்று பாடும்படி செய்கிறேன். தாங்கள் இவ்விடத்திலிருந்தே கேளுங்கள்" என்று கூறி தான்சேன் உட்சென்று ஹரிதாசருக்கு வணங்கி 'சுவாமி! சமுசாரத்தின் கஷ்டங்களால் மனது நிலையற்றிருக்கிறது. பக்தி நிறைந்த தங்களது கீதங்களைச் செவிக்கினிமையாய்க் கேட்டு மனத்திற்குச் சாந்தமளிக்க வந்துளேன். கிருபை கூர்ந்து ஆட்கொள்ளவேண்டும்" என்றார்.

தனது சீடனின் வேண்டுகோளுக்கிணங்கி தாசர் சுருதி கூட்டி பாடத் தொடங்கினார். சிறிது நேரத்திற்குள் பக்தி பரவசம் மேலிட இருவரும் ஆனந்தத்தி லாழ்ந்தனர். வெளியே யுட்கார்ந்திருந்த பாதுஷா கான

மாதுரியத்தால் தன்னையும் மறந்து வாய்விட்டு "பேஷ் பேஷ்" என்றார். அக்குரல் கேட்டு ஹரிதாசர் "தான்ஸேன்! வெளியிலுள்ளவர் யார்?" என்றார்.

தான்ஸேன், "சுவாமீ அக்பர் சக்ரவர்த்தி தங்களது கானத்தைக் கேட்க விரும்பி என்னிடம் கூறினார். நானழைத்துவந்து வெளியிலுட்காரச் செய்தேன்" என்று சொல்ல தாசர் "தான்ஸேன்! நீ விவேகமற்றவனல்லவா? மாய்கையில் மூழ்கிக் கிடக்கிறவர்களை இவ்விடம் அழைத்துவரலாமா? அங்ஙனமாயின் நமக்கு சாந்தி இரா. ஆயினும் இவ்வளவு தூரம் வந்தவரை உள்ளே அழைத்துவா" என்றார்.

தான்ஸேன் குரு கட்டளையை நிறைவேற்றினார். பாதுஷா உள்ளே வந்ததும், சக்ரவர்த்தி என்று கருவம் கொள்ளாமல் தாசரை வணங்கினார். தாசரவரை உட்காரச் செய்து புன்னகையுடன் "என்பாட்டைக் கேட்கவா வந்தீர்? இதோ பாடுகிறேன் கேளுங்கள்" என்று பாடத் தொடங்கினார். சிறிது நேரத்திற்குள் அக்கானத்தின் இனிமையைக் கேட்டு இரண்டு மான்கள் அவ்விடம் வந்து செவிகளைத் தூக்கி நின்றன. தாசர் சிறிது நேரம் பாடி நிறுத்தினார். பாதுஷா அப்போது தானணிந்திருந்த முத்து மாலையைக் கழற்றி ஹரிதாசர் பாதத்தில் வைத்தார். யாவற்றையும் துறந்த அவரது கண்களுக்கு மண்ணும் மணியும் ஒன்றேயன்றோ. தாசர் பாதுஷா வைத்த மாலையை எடுத்து தனது பக்கத்தில் நின்றிருந்த மான் கழுத்தில் போட்டார். உடனே மான்கள் குதித்து ஓடி விட்டன.

பாதுஷா அதனைக் கண்டு வெட்கமடைந்து "மதிக்கவொண்ணுத இம்மாலையை நான் எவ்வளவு கஷ்டப்பட்டுச் சம்பாதித்தேன். இக்காட்டு மனிதர் இதன் சிறப்பை எப்படி அறிவார்? குரங்கிற்கு பூ மாலை என்பது போலாயிற்று" என்றெண்ணினார். தாசர் பெருமை என்ன அறிவார்? அவரது கருத்தும் இயற்கையே யன்றோ? அவர் பெருமை கடவுளறிவல்லாது மாய்கைக் குட்பட்ட மனிதரறிவரோ? அப்பொழுது தாசர் பாதுஷாவின் எண்ணமறிந்தவராய் மறுபடியும் பாடத் தொடங்கினார். அவ்வோசைக்குக் காட்டிலுள்ள மான்கள் யாவும் அவ்விடம் கூடி கீதம் கேட்டு நின்றன. ஒவ்வொன்றின் கண்டத்திலும் முத்து மாலை தொங்கிக் கொண்டிருந்தன. அந்த விசித்ரதோற்றத்தை பாதுஷா கண்டு, வெட்கத்தால் தலை குனிந்தார். அவருக்கு யாவும் கனவுபோல் காணப்பட்டன. தாசர் பெருமையை அறிந்தார். அவர் மகானென்றுணர்ந்தார். தன் எண்ணமறிந்தே இந்நிகழ்ச்சிகளை யுண்டாக்கினாரென்றுணர்ந்தார். விழித்துப் பார்த்து மாய்கைக் குட்பட்டு மாய்கையினின்றும் விடுபடும் மார்க்கமறியாதிருப்பது மூடத்தன்மை என்றறிந்தார்.

தாசர் "வேந்தே! இதில் உமது மாலையைத் தேடிக் கொள்ளுங்கள்" என்றார். பாதுஷாவிற்கு ஒன்றும் தோன்றவில்லை. தாசரின் பாதங்களைப் பணிந்து "என்னை மன்னிக்கவேண்டு"மென, தாசர் "வேந்தனே! பயமில்லை. மாய்கையே சாசுவதமென்று நினையாதே. நன்மார்கத்தி லீடுபட்டுழலு. நியாய புத்தியுடன் பிரஜைகளை ஆதரிப்பாயாக! மதப்பற்றுதலற்ற உன்னைப் போன்ற அரசரைப் பெறும் பாக்கியம் பிரஜைகளுக்குண்டாயது கடவுளின் கிருபையேயாம். சுப முண்டாகுக." என்று ஆசிர்வதித்தனுப்பினார். இக்கதை அக்காலத்திய இந்து முஸ்லீம் ஒற்றுமையை நன்கு விளக்குகிறதன்றோ?

## நாவல் நாடகங்கள்.

(விநாயக தாஸன்.)

நமது தாயகமாகிய இந்தியா ஆதி நாள்தொடங்கி புராண இதிகாச சம்பந்தமான சரித்திரங்களுக்குப் பெயர்போனது. மேலும், இராமயாணம் மகாபாரதம் முதலியவைகள் நடந்ததும் நமது நாட்டிலேயே. புத்தர், இராமானுஜர், சங்கரர் முதலியவர்கள் தோன்றியதும் இந்நாட்டிலேயே. இவ்வளவு சீரும் சிறப்பும் அடைந்த நமது நாட்டில் ஆதிகால முதற்கொண்டு, இராமாயாணம் பாரதம் முதலிய புண்ணிய சரித்திரங்களை நாடகமாக நடித்துவந்தார்கள். நாடகம் என்றால் நடித்தல்என்று பொருள்பெறும். கதைகளைப் படிப்பதிலும், கேட்பதிலும் நாடக ரூபமாகப் பார்ப்பதே பசுமரத்திலறைந்த ஆணியைப்போல் மனதிற் பதியும் என்பது ஆன்றோர் துணிபு.

சுமார் எண்பது ஆண்டுகளுக்குமுன் நடந்துவந்த நாடகங்கள் ஒரு விதமான அமைப்பை யுடையது. அதுபோன்ற நாடகங்கள் அதாவது தெருக்கூத்துகள் இப்பொழுதும் சிற்சில கிராமங்களில் முக்கியமான விசேஷ தினங்களில் நடைபெற்றுவருகிறது.

இப்பொழுது இருந்துவருவதுபோல், மின்சாரவிளக்குகள், கியாஸ் லைட்டுகள், நானாவித வர்ணங்களமைந்த பட்டுப்புடவைகள் முதலிய உடுப்புகள், காக்ஷிப்படுதாக்கள் ஹார்மோனியம் முதலியவைகள் முற்காலத்தில் இல்லை. அக்காலத்தில் சாதாரண கீற்றுக்கொட்டகை யொன்றை அமைத்து, அதில் நடிகர்கள் இராமாயணம், மஹாபாரதம் இவைகளில் ஒருபகுதியோ, பலபகுதிகளையோ நாடகம் ஆடுவர். சூத்திரதாரர், விதூஷகன் இருவரும் முக்கிய நடிகர்கள். பிற்பால், ஆண்வேடம் தரித்தோ, பெண்வேடம் தரித்தோ சிலர் வந்து கதையைத் தழுவி நாடகம் ஆடுவார்கள். வெளிச்சம் வேண்டியதற்காக அந்தந்த ஊர்களில் உள்ள நாவிதர்களோ, குயவர்களோ, தங்கள் முறைப்படி தீவட்டிக் கொளுத்திக் கொண்டிருப்பார்கள். நாடகம் துவக்கமாகுமுன், விநாயகர் துதி, கலைமகள் துதி, முருகன் துதி, முதலிய ஸ்தோத்திர பாடல்களைப் பாடிய பின்னர்தான் நாடகம் துவக்கப்படும். ஒரு நடிகர் வருவதற்குமுன் இன்ன நடிகர் தான் வருகிறார் என்று விதூஷகன் மும்முறை உரத்தி ஜனங்களுக்குக் கேட்கும்படியாகக் கூவுவான். மேலும் முற்கால நடிகர்கள் புராண இதிகாச சம்பந்தமான நாடகங்களை நடிப்பார்களேயன்றி மற்றவைகளை நடிக்க மாட்டார்கள்.

தற்பொழுது நடந்து வரும் நாடகங்கள் பெரும் பாலும் காதல் விசேஷித்த நாவல் நாடகங்களாக மாறி விட்டன. இதற்கு நவீன நாகரீகமே

காரணம். புராண இதிகாச சம்பந்தமான சரித்திரங்களைப் பார்ப்போமென்றால் எங்கேயாவது, யாராவது, அத்திபூத்தது போல் நடத்துகிறார்கள். ஆனால் இப்படி நடத்துகிறவர்களுக்கோ வசூல் கிடையாது. நல்ல நாவல் நாடகங்களை வைத்தால்தான் தற்போது வசூலாகிறது.

நாவல் என்றால் நவீன கதை யென்றும் பொய்க் கதை யென்றும், யாவரும் அறிந்திருப்பார்கள். நல்ல நீதிகளையும், இம்மைக்கும் மறுமைக்கும் வழிகாட்டிகளாகிய சாஸ்திரங்களை நடத்துகிறார்களோ வென்றால் அதுதான் முற்றிலும் கிடையாது. பின்னர் யாதென்றால் காதலால் விசேஷித்ததும் அதனால் கொலை முதலியவைகள் உண்டாகிறதும், கற்புள்ள மங்கையரைக் கற்பழிப்பதும் ஆகிய சரித்திரங்கள் தான் பெரும்பாலும் நடைபெறுகின்றன. நேயர்களே! நம்மனோரில் சிறுவர் சிறுமியர் முதலியவர்கள் இவைகளைப் போய்ப் பார்த்தால் அவர்கள் மனம் எவ்வாறு மாறுபடும் என நீங்களே தெரிந்து கொள்ளுங்கள். இந்த விதமான நாடகங்களினால் புராண சம்பந்தமான புண்ணிய சரித்திரங்கள் நாடக அரங்கத்திலேயே இனி நடைபெறாதொழிந்து விடுமோவென ஐயுற வேண்டியதாக இருக்கிறது.

ஆனால் பிரபல நாடகக் கம்பெனித் தலைவரான ஸ்ரீமான் வி. கன்னையா என்பவர், யாம் இதுகாறும் கூறிவந்த இனத்தைச் சேராமல் புண்ணிய சரித்திரங்களைப் பெரும் பொருள் செலவு செய்து, தயாரித்து நாடகம் நடத்துவதை நாம் பாராட்டாமலிருக்க முடியாது.

மதுரையில் சில பிரமுகர்களும் வித்துவான்களும் ஒரு கூட்டம் கூடி நாடகம் இன்னவிதமாக நடத்தவேண்டும் என்று ஒரு திட்டம் ஏற்படுத்தினர். ஆனால் அதை அமுலுக்கு கொண்டுவரவில்லையோ—யாதோ தெரியவில்லை!—அப்படிக் கொண்டு வந்தால் இப்படி விசேஷித்த நாவல் நாடகங்கள் நடைபெறாது என நம்புகிறோம்.

இதுவரையில் பலவிதமான பெயர்களை வைத்துக்கொண்டு நாடகம் நடத்தி வந்தவர்களும், உலகப் போக்கைக் கவனித்து "நாவல் நாடகக் கம்பெனி" யெனப் பெயர் வைத்துக் கொண்டு புறப்படுவார்களோ வென சந்தேகிக்க வேண்டியதாக இருக்கிறது—ஏன்—ஜனங்கள் அவைகளை ஆதரித்துப் பிரியமுடன் பார்த்தால், நாடகத் தலைவர்கள் மேல் குறை கூறி யாது பயன் ?

இதைப்பற்றி சில தீர்மானங்கள் செய்து, புராண இதிகாச சம்பந்தமான நாடகங்களை விருத்தியாக்குதல் நலம் என்று நம்புகிறோம். இப்பேருதவி சீக்கிரம் கைகூடுமாறு எங்கும் வியாபித்த பரம் பொருளை வழுத்துகின்றனம்.

# நம் நாடும் கல்வியும்.

இப்பொழுது நம் நாட்டில் எவ்விதக் கல்வி அவசியம், எவ்விதக் கல்வி கற்பித்தால் இனி அதிகப் பலன் நமக்கு ஏற்படும் என்பதைப்பற்றி அதிகக் கவனம் செலுத்த வேண்டும். நம்மிந்தியா நீர்வளமிருந்து பருவ மழையோடு கூடிய பாங்கான பூமி. நிலமும் சாகுபடிக் கேற்ற சத்து நிறைந்தது என்பதைப் பற்றி எவரும் ஆக்ஷேபிக்க முடியாது அப்படியிருந்தும் அநேக நிலங்கள் தரி சாகக் கிடக்கின்றன. விவசாய விருத்தியில் ஊக்கமும் கவலையும் அற்றிருப் பதே இதற்கு முக்கியகாரணம்; மேலும் நிலத்தைப்பண்படுத்திக் கலப்பையைக் கையாளும் ஆற்றலும் சாமர்த்தியமும் அற்றவர்களாகிவிட்டோம். இப்பொ ழுது படிப்பு பேனா பிடிக்கக்கூட கை உதறலும் நடுக்கமுமுறுகிறது. மனோ வலிமை, சரீரபலம் குன்றி அன்னியர்க்கு அடிமைத்தொழில் எப்பொழுதும் புரிவதற்கேற்ற வழியிலேயே கல்வி கற்பிக்கப் படுகிறது. அப்படி யும் மனித னின் வயதையும் பலத்தையும் அநேகமாய் விழுங்கி விடுகிறது. பிறகு உடனே வாழ்க்கையில் பிரவேசித்து உடனே பணம் சம்பாதிக்கவும் பிர யோசனமற்றிருக்கிறது. ஒருவன் ஸ்கூல் பைனல் என்னும் பரீக்ஷையைக் கிரம மாய் ஒவ்வொரு வகுப்பிலும் தவறாமல் தேறி முடிப்பதற்குள் அவனுக்குச் சம்பளத்திற்கும் பாடபுத்தகத்திற்கும் இதர செலவிற்குமாக குறைந்தது 2000 ரூபா செலவழிந்து விடுகிறது. பிறகு உத்தியோகத்தை நாடி மாதம் 1-க்கு ரூபா 20 கூட கிடைக்காத ஒரு அடிமைத் தொழிலை ஏக்கத்தோடு ஏற்கவேண்டி யிருக்கிறது. அவன் படும் கஷ்டமும் தொல்லையும் சொல்ல முடியாததாயிருக்கிறது. அநேகர் அவ்வடிமை வேலைகூடக் கிடைக்காமல் நடுத்தெருவில் ஈஸ்வர பகவந்நாமத்தைச் சொல்லி பிக்ஷை ஏற்பதற்குக் கூட அவர்கள் படிப்பின் கௌரவம் அவர்களை அடிமைப் படுத்தி வெளியில் தலை காட்டாமல் மறையச் செய் கிறது. இவர்கள் இப்பொழுது கற்பிக்கப்படும் இப்பாழும் படிப்பிற்கு விழலுக்கிறைத்த நீர் போல என்பதற்கொப்பப் பணத்தை வாரி இறைக்காமல் அப்பணத்தை சிரத்தையுடன் விருத்தி செய்து கொண்டு வந்தாலே இவர்கள் பிற்கால வாழ் நாளை நன்னாளாகக் கழிக்கலாம். இப்படிச் சொல்வதால் படிப்பே தேவையில்லை யென்று சொல்வதாய்க் கருதி விடலாகாது. ஆனால் எம்மாதிரிப் படிப்பு அளித்தால் நமக்கு நலம் ஏற்படும் என்பதுதான்? யாவருக்கும் அடிப்படையான கல்வி அவசியம் வேண்டியது. பிறகு அவர்கள் படிப்பு முடிந்ததும் பிறர் முகத்தையும் கையையும் நோக் காது, தானே தன் முயற்சியால் சம்பாதிக்கும் துறையில் இறங்கும்படியான ஆற்றல் படைத்தவர்களாய் அவர்களை ஆக்கக் கூடிய படிப்பே நம் நாட்டிற் குத் தற்பொழுது அவசியம், சரித்திர சம்பந்தமான பாடங்களைக் கூடிய

வரையில் குறைத்துக்கொண்டு விவசாயம் வாணிபம் கைத்தொழில் முதலான பாடங்களைக் கட்டாய பாடமாக ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் ஏற்படுத்திச் சிரத்தையுடனும் ஊக்கத்துடன் சரியான முறையில் கற்பித்து மாணவர்கள் சரியானபடி தேர்ச்சி யடைகிறார்களா என்பதைப் பிரத்திய க்ஷமாகப் பரீக்ஷித்துக் கண்டு குற்றங் குறைகளிருந்தால் உடனே நீக்கித் திருத்த வேண்டும். சுகவழி முதலான சரீராரோகியத்திற்கான புத்தகங்களை ஏற்படுத்தி அனுஷ்டிக்கச் சொல்ல வேண்டும். கிரமமான நன்னடத்தை உடையவர்களாய் அவர்களை ஆக்கவேண்டும்.

விளையும் பயிர் முளையிலேயே என்பதற்கேற்ப பால்ய வயதிலேயே அவர்களைச் சீரான வழிக்குக் கொண்டுவரவேண்டும். அவர்கள் மனோபலம் சரீரபலம் விருத்தியடையச் செய்யவேண்டும். அடுப்பங்கரைச் சாமிகளாகமல் இந்தியர்கள் எந்நாளும் அடிமைகள் என்கிற பதத்திற்கு இடங்கொடுக்காமல் நமக்குள்ளேயே பொறாமையும் வஞ்சகமும் சண்டையும் சச்சரவும் ஏற்றமும் தாழ்வும் ஏற்படா வண்ணம் காத்து அந்நியர்களுக்கு நாம் அடிமை யில்லை என்கிறதை நாம் நிதர்சனமாகக் காட்டி விளங்க முயலும்படியான பலன் நம் கல்வியால் ஏற்படக் கூடியதாய் இருக்கவேண்டும்.



ஆசிரியர் சீடனுக்கு

## உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

அறிவு சிவமாக ஆடும் திருக்கூத்து
அறிவு சிவமாகும் அறிந்தவர்க் கெல்லாம்
அறிவு சிவமென் றறிய வல்லார்க்கு
அறிவு தன்னுள்ளே ஆனந்தமாமே.

எங்கும் பரிபூரணமாய் நிச்சலமாய் அலைவில்லாத சமுத்திரம் போல ஞான சொரூபமாகிற அறிவுதானே சிவன். நித்தியமாய்த் தானே தானாய் விளங்கி நித்தியானந்தமா யிருக்கிற அறிவுதானே பிரபஞ்சமாக வேணு மென்று நினைத்தது. அந்த அறிவு தனக்கே சுத்தமாயை யென்று பெயர். அந்த அறிவு சொரூபமாகிற மாயையானது நிசானந்தத்தை மாத்திரம் மறந்ததே அவ்வியக்தமாகிற ஈஸ்வரனுடைய காரணதேகம். அந்த ஈஸ்வரன் தானே அனந்தங்கோடி பிரம்மாண்டமான நாம ரூபாகாரமாகத் தூல சூக்கும பிரபஞ்சத்தைக் கற்பித்தது. பிரபஞ்சங்களைச் செய்து கொண்டிருக்கிற படியினாலே சஞ்சலத்துவம். அந்த சஞ்சலமான பிரபஞ்ச கற்பித வாசனா பலத்தினாலே தன்னுடைய சிற்சொரூபமான சிவ சொரூபத்தை மறந்து

உயிரும் உடலும் தானாய் ஆங்காரத்தினாலே சடவடிவாயிற்று. சிவமாயும் நிச்சலமாயுமிருக்கிற அறிவுதானே பிரபஞ்ச விச்சையினாலே தன்னுடைய சொரூபானந்தத்தை மறந்ததே சஞ்சலத்துவம். பிரபஞ்ச பாவனையினாலே உயிரும் உடலும் தானே யென்று விஷயானந்தத்தைச் சிந்தித்துப் புசிக்கிறதே சடத்துவம். தூல சூக்கும நாம ரூபமான பிரபஞ்ச சொரூபம் எப்படியென்றால், கானற்சலம் போலவும் சொப்பனம் போலவும் தோன்றிக்கொண்டிருந்தாலும் அநித்தியம் உற்பன்னமானவுடனே நசித்துப்போகிறது. சுயம் தானாக விளங்குகிற தில்லாதபடியினாலே சடம் அநித்தியமாயும் சடமாயும் இருக்கிறது. சுகமாகாத படியினாலே துக்கரூபம். சுத்தமாய்ச் சித்தாய்க் கேவலானந்தமா யிருக்கிறதே சிவசொரூபம்

வினா:—சத்தாவ தேதென்றால்

விடை:—பரிபூரணமாய் எங்கும் நிறைந்து ஒன்றோடேயும் கூடாமல் மனம்வாக்குக் கதீதமாய்ச் சகல பிரபஞ்சத்துக்கும் ஆதாரமாய் நிர்விகாரமாய் நித்தியமாய்த் தானே தானாய் விளங்குகிறதே சத்து ரூபம்.

வினா:—சித்தாவ தேதென்றால்

விடை:— எப்போதும் ஏக ரூபமாய்த் தனக்குத் தானே பிரகாசமாகிற அறிவாய் நாம ரூபமான தூல சூக்குமமாய்ச் சொப்பனம் போலவும் கானற்சலம் போலவும் காணப்படுகிற சகல பிரபஞ்சத்துக்கும் சாட்சியாய் அறிந்துகொண்டிருக்கிறதே சித்து ரூபம்.

வினா:—ஆனந்தமாவ தேதென்றால்

விடை:—சித்து என்கிற அறிவுமற்றுக் கேவலம் தன்மயமாய் நிற்கிறதே சிவானந்தம்.

அது எப்படியென்றால்? பாலினுடைய வெண்மை சத்துநிறமானது. சித்து மதுரமானது. ஆனந்தம் இது திருஷ்டாந்திர மென்றறிக.

வினா:—சூரியனுடைய சந்நிதானத்திலே ஜகத்து எப்படி தொழில் படுகிறதோ அப்படியே அறிவினுடைய சந்நிதானத்திலே ஜகத்து எப்படி தொழில் படுகிறதென்றால்?

விடை:—அநித்தியமான சடம் நித்தியமா யிருக்கிறது போலத் தோன்றுகிறது. அறிவில்லாத சடம் அறிவைப்போல விளங்குகிறது. துக்க ரூபமாகிற சடம் சுகமயம்போல விளங்குகிறது. ஆகையினாலே அறிவினுடைய சந்நிதானத்தினாலே சடம் தொழில்பட்டாலும் சடம் பொய். சடத்திலே எல்லாம் சந்நிதானந்த சொரூபமாய் விளங்குகிறது.

வினா:—வைராக்கியம் பக்தி, ஞானம் என்பது எப்படி யென்றால்?

விடை:—வாசனா ரூபமான நினைவுக்கு வாசனாக்ஷயம் பிறந்தவிடம் வைராக்கியம். அந்த நினைவே சர்வ காலந் தானே சிவரூப அறிவாய் விளங்குறவிடமே பரபக்தி. அந்த அறிவுதானே நிரதிசயானந்தமாயிருக்கிற விடமே ஞானமென வறிக.

பஞ்ச விந்திரிய விடய நினைவெல்லாம் தானல்லவென்று விட்டு நீங்கின நினைவே வைராக்கியம்.

(தொடரும்)

*

# ஜோதிடப் பகுதி.

இராயவேலூர் வேலப்பாடி பாலசோதிட வித்வ ஸ்ரீமான் வடிவேலு நாயகரவர்கள் எழுதியது:—

## கடவுள் வணக்கம்.

அம்புவிக் கறிவை யூட்டி அலகிலாப் புகழ்பெற்றோங்கி
அம்புயத் தவனையாரு மானந்தனெனும் பேர்கொண்டோன்
நம்புசீர் வெளியீட் டின்கண் நாடுசோ திடமுரைக்க
பம்புசீர் வேற்கை யண்ணல் பதமலர் மனத்துள் வைப்பாம்.

இருநிலம் போற்றும் பெருநலம் ஆற்றலும் இணையில் சீர்மல்கும் எமது செந்திலாண்டவன் திருவருட் பெருக்கால் இப்போது நமது ஆனந்தபோதினியில் சோதிடப் பகுதியை விளக்க முற்போந்தனம். இப்பகுதியின் முதலங்கமாகச் சோதிடனுடைய இலட்சணங்களை விக்கிரமார்க்கன் அவைக்கண் விளங்கிய புலவர் சிரோமணிகள் ஒன்பதின்மருள் ஒருவராகிய ஆசிரியர் வராஹ மிசிரனரின் பிருஹத் சம்ஹிதையின்படி எடுத்துக் காட்டுவோம்.

ஷை சம்ஹிதை இரண்டாம் அத்தியாயம் முதற் சுலோகத்தில் "தத்ர-ஸாம்வத்ஸரோ - அபிஜாத் :— ப்ரியதர்சநோ - விநீதவேஷ :" என்ற வாக்கியத்தில் நல்ல குலத்தில் பிறந்தவனும், பார்ப்பதற்குப் பிரியமானவனும், கீழ்ப்படியுங் குணமுடையவனும், சத்தியமாய் (உண்மையாய்) பேசுந் தன்மையுடையவனும், பிறரிடத்தில் குற்றங் கண்டு பிடிக்காதவனும், அங்கஹீனமின்றி எல்லா அங்கங்களும் அழகா யிருக்கப்பட்டவனும், தலை, முகம், கண், புருவம், பல், காது, கை, கால், நகம் முதலிய எல்லா அங்கமும் உத்தம இலட்சணங்களுடன் கூடியவனும், ஸ்தூல சரீரமுள்ளவனும், காம்பீரமான குரலுடையவனும் ஆக இருக்கப்பட்டவனே சோதிடன் என்ற பெயருக்குச் சிறந்த அதிகாரியாவான். ஏனெனில், அநேகமாய் குணமும் தோஷமும் சரீரமும் ஆகாரத்தை அநுசரித்து இருக்கின்றனவென்று கூறியுள்ளார். இதனை:—

சத்தியந் தண் தயையடக்க மன்பீகை யாதியன தழைத்திலங்குஞ்
சாந்தகுணமுடன் றெய்வ பத்தியிருந் திளமையுநற் சார்ந்துநன்கு
சித்தாந்தஞ் சாதகநன் முகூர்த்தமெனு முப்பிரிவாய்த் திகழாநின்ற
செய்யசோ திடக்கலைகள் பலவோதி யுணர்ந்தறிவிற் றேர்ந்துமேலாம்
எத்தகைய கணனங்க ளெனினுமியற்றிடும் வன்மை எய்திப் பின்னர்
இயல்கிரக புடத்துடனே பாவபுடங் கிரகபல மிவையனைத்துஞ்
சித்தமலை விலாதியற்றுந் திறனுடையோன் எவனவனே சிறப்பின் [மிக்கச்
சீரியசோதிடப்புலவனெனவுரைத்தார் பெரியோர்கள் செகத்திலம்ம.

எனவரும் எமது ஜாதக சாகரம் முதற்றரங்கத்துப் பாயிரச் செய்யுளானும் நன்குணரலாம்.

மற்றும் ஆசிரியர் வராஹ மிசிரனாரவர்கள் 2-வது சுலோகத்தில் பரிசுத்த மானவனும், புத்தி கூர்மை யுள்ளவனும், சபையில் பயமின்றி நன்றாய்ப் பேசக் கூடியவனும், பேசுந் திறமையில் மிக்கவனும், சமயோசிதமான புத்தி யுடையவனும், தேசகால மாறுபாடுகளை நன்றாய் அறிந்தவனும், தன்னுடன் வாசித்தவர்களால் (சகாத்தியாயிகளினால்) வெறுக்கப்படாதவனையும், எவ்வகையான விசனங்களில்லாதவனும், சாந்தமாய்ப் பேசுந் தன்மை யுடையவனும், சரீரவளமை யுடையவனும், அபிசாரம் (மாரணம்), சாந்தி செய்தல், பௌஷ்டிகம் (முதல் வேதம்) முதலிய வித்தைகளை நன்றாய் அறிந்தவனும், கடவுள் வழிபாடு - தெய்வ விரத அநுஷ்டானம் இவற்றில் மிக்க சிரத்தை யுள்ளவனும், தான் செய்கின்ற கிரக கணிதத்தினால் உலகுக்கு ஆச்சரியத்தை யுண்டாக்கித் தனது கீர்த்தியை (எண்டிசாமுகத்திலும், பெருகப் பரவச் செய்பவனும், அனேக வகையான உற்பாதங்களினால் உலகுக் குண்டாகும் அசுப வடிவத்தை (துக்கத்தை)ப் போக்குவதற்குக் கேட்கா முன்னரே சாந்தி முதலியவைகளைச் சொல்லுவோனும், கிரகம், கணிதம், ஓரை முதலிய சகல கிரந்தங்களை (சாஸ்திரங்களை) நன்கு அறிந்தவனும் உள்ளவன் எவனோ அவனே சோதிடனாவான் என அருட் செய்துளார்.

குறிப்பு:—தற்காலத்துச் சோதிடர்களின் இலட்சணங்களை ஊன்றி நோக்குமிடத்து ஆசிரியர் வசனத்திற்கு எட்டுணையும் பொருந்தவே பொருந் தாது. பெயர் மாத்திரத்தால் சோதிடரென வுள்ளவர்களே. இக்காலத்தில் பெரும்பாலோராவர். சாலைச் சோதிடர், சன்னியாசி சோதிடர், கைரேகை சோதிடர், குறிசொல்லும் சோதிடர், ஆரூட லட்சணி சோதிடர் என எங் கும் சோதிடராகவே இருக்கின்றனர். முறைப்படி சாஸ்திரங்களை ஒருங்கே கற்றுணர்ந்து கிரகஸ்புடம், பாவகஸ்புடம், கர்ப்போற்பத்தி இலக்கின சோதனஸ்புடம், தேசாந்தர சமஸ்காரம், தேசீய இராசிமானங்கள் இவை களைக் கணிக்கத் தெரிந்த சோதிடர்கள் இக்காலத்தில் நூற்றுக்கு ஒருவர் கூட இல்லையெனக் கூறல் மிகையாகாது.

"ஆர்த்த சபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம் புலவர்" என ஆன்றோர் அருளியபடி ஆயிரத்தில் ஒருவர் அல்லது இருவர் இருத்தல் அரிதினும் அரிதென்னலாம். முக்கியமாய்ச் சோதிடனுக்குப் பஞ்சாங்க கணி தம் தெரிந்திருத்தல் மிகமிக அவசியமாகும். இந்த ஞானம் ஒரு சிறிது மின்றி சோதிடரென முன்வருதல் இருமையிலும் துன்பத்தைப் பெறுதற் கன்றி இதனாலுண்டாம் நற்பயன் ஒன்றுமில்லை என்க. பன்னிரண்டு இராசி, ஒன்பது கிரகம், 27 நட்சத்திரம் இவற்றை அறிந்து கொண்ட ஒருவன், சில காடுமுரடான பாடல்களை நெட்டுரு செய்துகொண்டு கேட் போர் வியக்குமாறு சோதிடங் கூறி பொருளீட்டுவானாயின் துன்பந்தராது அதனால் இன்பமுண்டாதல் யாங்ஙனம்? இங்ஙனம் கூறுவோர் இம்மையில் தாரித்திரத்தையும், மறுமையில் நரகத்தையும் பெறுதல் திண்ணம். இதனை "கவிகற்றவர்க்கும் கணிகற்றவர்க்கும் ... ஓயா தரித்திரம்" என்ற பெரியார் திருவாக்கு வலியுறுத்துதலுணர்க. இங்ஙனம் சாஸ்திரங்கற்றுணராத சழக்கர் களாகிய போலிச் சோதிடர்களிடத்தில் சோதிடத்தின் இலட்சணம், சோதிடன் இலட்சணம் இவைகளை நன்கு அறியாத பேதை மாந்தர் சோ திடங்கேட்டு அடையும் பயன் யாது சொல்! இத்தகையோரிடம் சோதி டங்கேட்டுணர்ந்த ஒரு சிலர் கற்றுணர்ந்த கல்விப் பெருமக்களாம். உத்தம

சோதிடர்களிடம் நற்காலத்தின் பயனைச் சென்று சோதிடங் கேட்பின் அவர்கள் உண்மையைக் கூறினும் ஒருபோதும் ஏற்றுக்கொள்வதே கிடையாது. காலத்தின் போக்கை என்னென் றியம்புவது? அந்தோ! இதுவும் கலியின் கொடுமைபோலும்! கணபதி என்னும் வரனுக்கும், பாலாம்பிகை என்னும் வதுவுக்கும் சாஸ்திரானுசாரமாய் முறையே அவிட்டம், மூலம் என்னும் நட்சத்திரங்கள் ஆகின்றது. இதனுண்மையை யுணரார் போலிச் சோதிடர் ஒருவர் மிருகசீர்ஷம், உத்திரமெனக் கலியாணப் பொருத்தங் கூறி விட்டார். கேட்கச் சென்றோர் அவரவர்க்கே பிருகஸ்பதிவாக்கெனப் பிடித்துக் கொண்டனர். உண்மையை உள்ளபடி அறிந்திருப்பின் இங்ஙனம் அங்கீகரியார்களன்றோ. ஆதலின் நம் ஆனந்தபோதினி வாசகர்களுக்கு முதல் முதல் சோதிடன் இலட்சணம், கேட்போர் இலட்சணம் இவற்றை விளக்கிய பின்னர் பலத்தன்மைகளை யுணரும் அரிய சோதிட வியாசங்களை வரைவோமாக. (தொடரும்)

## ஜீவிய சந்தாதாரர்.

நம் போதினிக்கு இவ்வருட ஆடி மாதம் முதல் 3353 நெ. சந்தாதாரர் ம-ா-ா-ஸ்ரீ, M. S. கிருஷ்ண அய்யர், மைலாப்பூர், மதராஸ், ஜீவிய சந்தாதாரர்களி லொருவராகச் சேர்ந்து ஆதரித்து வருவதைப்பற்றி நாம் மிகவும் பாராட்டி நமது மனப்பூர்வமான வந்தனத்தை அவருக்குச் செலுத்துகிறோம். அவரைப்போல் இன்னும் அநேகர் நமது போதினியை ஆதரிப்பார்களாக. கருணாநிதியாகிய கடவுள் அவர்களுக்கு நீண்ட ஆயுளும் சகல சம்பத்தும் அளிப்பாராக.

பத்திராதிபர்.




## ஹிந்து ஸ்திரீகளின் நிர்ப்பாக்கியம்.

(ஸ்ரீமதி ஜி. சுமதி பாய், B.A., L.T., எழுதியது.)

பாரத மாதாவின் ஸ்துதி எங்கும் சப்திக்கும் நம் இந்திய தேசத்தில் அம் மாதின் மகளிர்களான பெண்கள் மாத்திரம் கைதிகளெனக் கட்டுண்டு உழலுவது வியப்பன்றோ! ஹிந்து மாதா அன்னியரின் கையினின்று விடுதலைப்பட வேண்டின், ஸ்திரீகள் பழையரீதியின் அநியாயத்தின்றும், பழக்க வழக்கங்களின் கட்டுக்காவலினின்றும் தப்ப வேண்டாமா? 'நம் தேசத்துப் பெயர்களுக்குக் குறையொன்றும் இல்லை'' என அனேகர் பெருமை பாராட்டுவதுமுண்டு. அத்தகையரின் அபிப்பிராயப்படி, ஸ்திரீகளுக்கு ஆகாரம் ஆடை ஆபரணம் தவிர வேறு ஒன்றும் வேண்டியதில்லை போலும்! நம் இந்திய மகளிரின் நிஜமான நிலைமையை இங்குச் சற்றுக் கவனிப்போம்.

குழந்தைப் பருவம் தொட்டே பெண்கள் உபேக்ஷிக்கப்படுகின்றனர். அனேக குடும்பங்களில் ஆண் குழந்தை பிறந்ததென்றால் வெகு ஆடம்பரம் செய்வதுண்டு; பெண் பிறந்தாலோ அதை அலக்ஷியம் செய்வதுமன்றி, "ஐயோ, நம் அதிர்ஷ்டம் பெண்ணாச்சே" என மனம் வருந்துவதுமுண்டு. மற்றும் ஆணுக்கு ஐந்து வயதானால் அக்ஷராப்பியாசம் செய்வதுண்டு. பெண்ணுக்கோ கல்வி அவசியமில்லை! "அடுப்பூதும் பெண்ணுக்குப் படிப்பென்னத்திற்கு?" என்பர் பலர். சிலர் தம் பெண்களை பள்ளிக்கு அனுப்பினும் அவர்களின் வித்தியாப்பியாசம் அற்பகாலமே நீடிப்பது. பத்து பன்னிரண்டு வயது ஆகுமுன் அப்பெண்களின் கல்விப் பயிற்சி நிறுத்தப்படுகின்றது. இரண்டு மூன்று வருஷங்களில் அவர்கள் என்னதான் கற்கக்கூடும்? கல்வியின் களஞ்சியத்தினின்றும் பரிகரிக்கப்பட்ட பெண்களுக்கு வேறென்ன சம்பத்து இருப்பினும் யாது பயன்? கல்வி அறிவு இல்லாத ஆண்மகன் ஒருவனை அனைவரும் மூடனென ஏளனம் செய்வரன்றோ? பெண்கள் மாத்திரம் வித்தையின்றி அஞ்ஞானத்தி லிருப்பது தகுமோ? அன்றி பெண்கள் அனைவரும் சரஸ்வதி கடாக்ஷம் பெற்றவரோ?

ஹிந்துக்களில், அதிலும் மேல் ஜாதியரில், ஒரு பெண்ணுக்குப் பத்து வயதாகு முன்பே அவள் பெற்றோர் அவளுக்கு வரன்தேட ஆரம்பிக்கின்றனர். அந்தோ, அப்பெண்ணுக்கு அவ்வயதில் லௌகிக விஷயமொன்றும் தெரியாது. அத்தகைய பேதையைப் பசுக்களைத் தானம் செய்வதுபோல் ஒருவனுக்கு மணம் செய்து கொடுப்பதே நம் தற்கால ஹிந்து தர்மமாகும்! அப்பெண்ணுக்குப் பகுத்தறிவு வயது வந்தபின், தனக்கு வாய்ந்த கணவன் தன் மனதிற்குச் சம்மதம் இருப்பினும் இல்லாவிடினும், அவள் தன் மனோபாவத்தை வெளியிடுவதற்கில்லை. அவள் எண்ணத்தை யார்தான் கண்ணியம் செய்வர்? தன் புருஷன் கூனனோ, குருடனோ, கிழவனோ, மூடனோ, மூர்க்கனோ, அவனுக்கே அவள் தன் வாழ்நாள் எல்லாம் சமர்ப்பிக்கவேண்டும். அவன் என்ன கொடுமை செய்யினும் அவள் எதிர்த்து ஏனென்று

கேட்கலாகாது. அவள் தூக்கிக்குங்கால் அவன் பெற்ருேர் பெரியோர், "எல்லாம் அப்பெண்ணின் அதிர்ஷ்டம், நாம் என்ன செய்யலாம்!" என்பர். நம் தேசத்தில் புருஷர்களுக்கு இத்தகைய கஷ்டமுண்டோ? ஆண்மகன் தன் சுயேச்சையாக மணம் செய்து கொள்ளலாம். மற்றும் தன் மனைவி தனக்குச் சம்மதமில்லாவிடில், அவன் அவளை நீக்கி விடுவதுமன்றி, வேறு கல்யாணமும் செய்து கொள்ளலாம். ஆண்களுக்கோ ஹிந்து சட்டமும் சமாஜமும் அனுகூலமாகவே இருக்கின்றதன்ரே! பெண்கள் கதியோ அதோகதி! புண்ணிய பூமியெனும் நம் தேசத்திற்கு இத்தகைய அநியாயம் தகுமோ?

நம் ஹிந்து சமாஜத்தில் பெண்களுக்கு வித்தைக்குத்தான் அருகத்துவம் இல்லை, ஐசுவரியத்திற்காவது சுதந்தரம் உண்டோ? அதுவுமில்லை. பெண்ணுக்குப் பிதுர் ஆஸ்தியில் யாதொரு உரிமையும் கிடையாது. எந்த நாள் அவள் மணம் முடிகின்றதோ, அந்த நாளே அவள் தன்தாய் வீட்டுக்கு ஹக்கை இழந்து, வேறு ஒரு குடும்பத்தவளாகின்றனள். புருஷன் ஆஸ்திக்கும் அவளுக்குச் சுதந்தரமில்லை கணவன் தனக்கு அனுகூலமாயிருந்தால் அவன் சொத்தை அவள் அனுபவிக்கலாம்; இல்லையாயின், அவள்பாடு திண்டாட்டம்தான். புருஷன் இறந்து விட்டாலோ, துக்கத்துக்கு பாத்தியம் மனைவி; சொத்துக்கு பாத்தியஸ்தர் பிள்ளை பங்காளிகள்! கைம்பெண்ணின் கொடுமையைக் கூறவேண்டியதே இல்லை. பந்து மித்திரரும் அவளை அபிஷ்டமென, அவள் முகத்தில் விழிக்கவும் அஞ்சுவர். பேழைக்குள் இருக்கும் பாம்பென அவள் அஞ்சி பதுங்கி, யாதொரு நிருவாகமுமின்றி, தவிக்க வேண்டியதாகின்றது. சுய சம்ரக்ஷணைக்கோ, அவளுக்கு வித்தையுமில்லை, சக்தி சாமர்த்தியமுமில்லை. அவள் வாழ்நாளே வீண் நாளாகின்றதன்ரே! வித்தை, தானம், சக்தி இவைகளுக்கு முதன்மையாக சரஸ்வதி, லக்ஷ்மி, துர்க்கா பூஜிக்கப்படும் நம்பாரதநாட்டில், அத்தேவதைகளின் அம்சங்களான பெண்கள் கல்வி ஆதாரமோ பொருள் ஆதாரமோவின்றி, இடமின்றித் திராணி குன்றி, அசக்தராய், நிர்ப்பாக்கிய ஸ்திதியிலிருப்பது பரிதபிக்கத்தக்கதன்ரே? இதுவோ நம் ஹிந்து சனாதன தர்மம்!

## ஸர். பிரபுல்ல சந்திர ரே.

(K. அல்லாபிச்சை.)

### முன்னுரை

ஒரு தேசம் முன்னேற்ற மடைந்து அதன் கீர்த்தி உலகில் பரவுவதற்கு அத்தேசத்திலுள்ள மேதாவிகளின் அரிய குணங்களும், தேசாபிமானமும், விசேஷ அறிவுமே காரணம்; இவ்விஷயங்களில் நம் இந்தியாவும் முன்னேறி வருகிற தென்பது யாவருமறிந்த விஷயம். காவியத்தில் ரவீந்த்ரநாத டாகூர், ஸரோஜினி தேவி முதலியவர்களும் ஸம்ஸ்கிருத பாஷையில் ஸர் ராம கிருஷ்ண பண்டார்க்கரும், கணித சாஸ்திரத்தில் சென்னை இராமாநுஜ ஐயங்காரும் பெரிய நிபுணர்களென மேனாட்டாரும் புகழ்கின்றனர். இன்னும் தேசபக்தியில் காலஞ்சென்ற கோகலே, மேடா, திலகர், சித்திரஞ்சனதாஸ், லஜபதிராய் முதலிய அரிய தலைவர்களும் மத விஷயங்களில் ஸ்வாமி ராம கிருஷ்ண பரமஹம்ஸர் ஸ்ரீவிவேகாநந்தர் முதலியவர்களும் மேன்மையுடைய

வர்கள் என்பதில் சந்தேகமில்லை இவர்களோடு, சாஸ்திர விஷயத்திலும் ஸர் ஜகதீச சந்திரவஸு, ஸர் பிரபுல்ல சந்திர ரே, ஸி. வி. ராமன் ஆகிய மூவரும் மஹா நிபுணர்கள். இவர்களின் அபார ஆராய்ச்சிகளை ஒவ்வொரு தேசத்தாரும் புகழ்ந்துரைத்திருக்கின்றனர் அவர்களில் ஒருவரான ஸர் "ரே" அவர்களின் சரிதத்தை இங்கு சுருக்கிக் கூறுவோம்.

## 2. பிறப்பு.

வங்காள மாகாணத்தில் குல்னு ஜில்லாவில் "கபோதாக்ஷ" நதி தீரத்தில் உள்ள "ரருலிகடிபாரா" என்ற ஊரில் 1861ம் வருஷம் ரே பிறந்தார். அப்போது இவர் தந்தையாகிய ஹரிச்சந்திர ரே என்பவர் அவ்வூரில் ஒரு பள்ளிக்கூடத்தை ஸ்தாபித்திருந்தார் அப்பள்ளிக்கூடத்திலேயே இவரும் சிறு வயதில் வாசித்து வந்தார். இவருக்கு ஒன்பதுவயது வந்தவுடன் இவரைக் கல்கத்தாவுக்கு கூட்டிக்கொண்டுபோய் வாசிக்கவைத்தார். அங்கு 1879ம் வருஷம்முதல் 1882ம் வருஷம் வரை வித்யாஸாகரர் ஸர்வ காலா சாலையில் வாசித்து வந்தார்.

## 3. இங்கிலாந்தில் படிப்பு

மேற் படிப்புக்காக இங்கிலாந்துக்குப் போகவேண்டு மென்ற அவா இவருக்கு அதிகமுண்டு; ஆனால் அதற்கு வேண்டிய திரவியம் தம் தகப்பனரால் கொடுக்கமுடியாதென நினைத்து "கில்க்ரைஸ்ட்" என்ற ஸ்காலர்ஷிப்புக்காக ஒருவருக்கும் தெரியாமல் படித்துக் கடைசியில் அதை வாங்கிக் கொண்டு 1882ம் வருஷத்தில் எடின்பரோவுக்குப் போனர். அங்கு ஆறு வருஷம் ரஸாயன சாஸ்திரத்தையே வாசித்து 1885ம் வருஷம் பி. எஸ். ஸி. (B. S. C.) பரீக்ஷையும், 1888-ம் வருஷம் டி. எஸ். ஸி. (D. S. C.) பரீக்ஷையும் கொடுத்து இந்தியாவுக்கு, திரும்பிவந்தார்.

## 4. ஆராய்ச்சி

இந்தியாவிற்கு வந்ததும் கல்கத்தா ராஜதானி கலாசாலையில் ரஸாயன சாஸ்திர ஆசிரியராக இவரை நியமித்தார்கள். தம் வேலையில் அதிக ஆராய்ச்சி செய்து 1895ம் வருஷம் டிசம்பர் மாதத்தில் "மர்கூரஸ் நைட்ரைட்" (Mercurous Nitrite) என்ற புது வஸ்துவைக் கண்டுபிடித்தார். அதுவரையில் அவ்விஷயம் ஒருவருக்கும் தெரியாதிருந்ததால் அவரை ஐரோப்பாவிலுள்ள ரஸாயனசாஸ்திரிகள் எல்லோரும் மதித்து வருகிறார்கள். பிரான்சு தேசத்திலுள்ள மான்ஷியர் பர்தாலெட் என்பவர் இவருக்கு உபசாரமாய் ஒரு கடிதம் எழுதியதோடு முற்காலத்தில் ஹிந்துக்களுக்கு ரஸாயனத்தில் எவ்வளவு பயிற்சி இருந்ததென்பதைப்பற்றி ஒரு புஸ்தகம் எழுதும்படியும் கேட்டிருந்தார். அதற்கிசைந்து பழைய நூல்களையும் ஏட்டுப் பிரதிகளையும் அருமையான ஸம்ஸ்கிருத நூல்களையும் பார்த்து, புத்தகம் எழுதத்தொடங்கி 1902ம் வருஷத்தில் முதற்பாகத்தையும் 1907ம் வருஷத்தில் இரண்டாம் பாகத்தையும் எழுதி முடித்தார். அதிக சிரமப் பட்டு எழுதிய புத்தகமானதால் அப்புத்தகம் வெகு நன்று யிருந்தது. அதைப் புகழாதாரில்லை.

## 5. ரசாயன வைத்தியசாலை ஸ்தாபிதம்.

இந்தியா கைத்தொழிலில் முன்னேற்றமடைய வேண்டும் என்ற ஆவல் கொண்டு 1892-ம் வருஷத்திலேயே "வங்காள ரஸாயன வைத்தியசாலை" ஒன்றை ஸ்தாபித்தார். ஆரம்பத்தில் அதற்கு 800-ரூபா தான் மூலதனம் இருந்தது. அதைக்கொண்டு ஒரு சிறு வீட்டை வாடகைக்கு வாங்கி அதில்

வைத்தியசாலையைவைத்துக் கொஞ்சங் கொஞ்சமாய் விருத்தி செய்து தமது ஒழிவு நேரத்தையெல்லாம் அதற்கே அர்ப்பணம் செய்து அதைத் தம் கண்ணுக்குக் கண்ணாய்ப் பாராட்டி வருகிறார். மஹா யுத்த சமயத்தில் ரசாயன மருந்துகள் பல வேண்டுமென்று கேட்டபோது இச்சாலையிலிருந்தே பல வித உதவிகள் செய்தார். இவ்வைத்தியசாலைக்கு 1919-ம் வருஷத்திலேயே 5-லக்ஷம் ரூபாய் மூலதனம் சேர்ந்துவிட்டதாம். ரஸாயன சாஸ்திர நிபுணர்கள் பலர் இதிலிருந்து பொதுஜன நன்மைக்கு உழைத்துவருகின்றார்கள். 1904-ம் வருஷத்தில், கவர்னர் ஜெனரலாயிருந்த லார்டு கர்ஸன் பிரபு, ஐரோப்பாவிலுள்ள சர்வகலாசாலைகளில் சாஸ்திர ஞானம் சொல்லிக் கொடுப்பதை அறிந்துவர இவரை அயல்நாடுகளுக்கனுப்பி வைத்தார். அங்கு சென்று புதிய விஷயங்கள் பலவற்றை அறிந்துகொண்டு திரும்பி இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். அயல் நாடுகளில் இவருக்கு அரிய மரியாதைகள் நடந்ததோடு அயல் நாட்டுப் பத்திரிகைகளும் இவரைப் புகழ்ந்து எழுதியது.

### 6. மற்றும் பல வேலைகள்

1912-ம் வருஷத்தில் பிரிடிஷ் ராஜ்யத்திலுள்ள சர்வ கலாசாலைகளின் முக்கிய அங்கத்தினர்கள் எல்லோரும் லண்டன் மாநகரில் ஒரு கூட்டம் கூடினார்கள். அதற்குக் கல்கத்தா யூனிவர்ஸிடியின் சார்பாக நமது ரே அவர்கள் லண்டனுக்குச் சென்றார். அங்கே "சர்வ வித்யா பாரங்கதர்" என்ற பெயர் வாங்கி ரசாயனப் பத்திரிகைகளில் பல வியாசங்கள் எழுதினார். இவைகளைக் கண்டு, டர்ஹாம் யூனிவர்ஸிடியார் இவரை வரவழைத்து டி. எஸ். ஸி. (D. S. C.) என்ற பட்டத்தை அளித்தார்கள். இப்படியே சில காலம் ஐரோப்பாவிலிருந்து மறுபடி கல்கத்தாவுக்குத் திரும்பி வந்தார்.

1916-ம் வருஷம் பிப்ரவரியீ லார்டு ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் காசி மாநகரத்தில் ஹிந்து யூனிவர்ஸிடியை ஸ்தாபித்த சமயத்தில் ரஸாயன சாஸ்திரத்தைப்பற்றி இரண்டு மூன்று பிரசங்கங்கள் செய்தார்; இவரை அந்த யூனிவர்ஸிடியின் கௌரவ உபாத்தியாயராக நியமித்தார்கள்.

1918-ம் வருஷத்தில் சென்னை யூனிவர்ஸிடியார் அழைப்பிற் கிணங்கி சென்னைக்கு வந்து இரண்டு பிரசங்கங்கள் செய்தார். அதற்காக யூனிவர்ஸிடியார் அளித்த வெகுமதியை ஏற்றுக்கொள்ளாமல் அதை மூல தனமாக வைத்து அதிலிருந்துவரும் லாபத்தை ரஸாயன சாஸ்திரத்தில் புத்தியுள்ள ஒரு பையனுக்கு வருஷா வருஷம் பரிசளிக்க வேண்டியதென்று ஏற்பாடு செய்து அதற்கு இந்திய நண்பராகிய காலஞ்சென்ற வெட்டர்பர்ன் பரிசு என்னும் பெயர் வைத்தார்.

### 7. சம்பூர்ணம்.

இவர் டாம்பீக மற்ற வாழ்கையிலேயே பிரியமுள்ளவர். தன் ஜன்ம பூமிக்கு தன்னலியன்ற தொண்டுசெய்து வருகிறார். இவரிடம் கவர்ன்மெண்டாருக்கு அதிக மரியாதை யுண்டு; அதற்கறி குறியாக 1919ம் வருஷத்தில் இவருக்கு "ஸர்" என்ற பட்டத்தை யளித்தார்கள். இவர் தமது வயது முதிர்ந்த இக்காலத்திலும் சுற்றுப் பிரயாணங்கள் செய்து சொற்பொழிவு நிகழ்த்தி வருகிறார். சென்ற வருஷத்திலும் சென்னைக்கு வந்து போயிருக்கிறார். "கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு" என்பதற் கிணங்க இவருக்கு செல்லுமிடங்களெல்லாம் தகுந்த உபசாரங்கள் நடக்கின்றன. இப்பேர்ப்பட்ட மஹான்கள் நீடித்த ஆயுளுடன் செழித் தோங்கி வாழவேண்டுமென்பதே நமது பிரார்த்தனை. சுபம்!




டாக்டர் மே. மாசிலாமணி முதலியார்.

## மிளகின் குணம்.

மிளகு (தமிழ்) பிளாக் பெப்பர் (இங்கிலீஷ்) மிறியாலு (தெலுங்கு) ஒல்லிமேணஸு (கன்னடம்)

கிடைக்குமிடம்:— இது சர்வகாலங்களிலும் அகப்படக்கூடிய ஓர் படரும் மூலிகையில் இருந்து எடுக்கக்கூடிய விதை. சாதாரணமாய் மலையாளக் கரையிலும், திருவாங்கூரிலும், குடகு தேசத்திலும் தென்மேற்கு இந்தியாவிலும் கிடைக்கக் கூடியது.

உபயோகமும் குணமும்:— இது சாதாரணமாய் சமயல் பாகங்களில் உபயோகித்து வருகின்றார்கள். இந்த உலகத்திலுள்ளவர்களில் பெரு மக்களால் உபயோகப்படுத்தப்படுகின்றது. அநேக நூற்றாண்டுகளாய்த் தென்னாட்டுத்த தமிழர்களால் இதை உப்பு புளி மிளகாய் துவரம்பருப்பு, ஆன மற்ற வஸ்துக்களுடன் கலந்து காய்ச்சின ஜலத்தை மிளகு ரசம் என்று ஆகாரத்துடன் ஜீரண சக்தியை உண்டு பண்ணுவதற்காக உபயோகித்து வருகின்றார்கள். தவிரவும் அநேக ஆண்டுகளாகவே பல தேசத்தவர்களும் இதை மருந்தாகவும் மருந்துகளுடனும் சேர்த்து உபயோகித்து வருகின்றார்கள். கிரிகெரின் இரண்டாவது பதார்த்தமாய் இது கூறப்படுகின்றது. இது மிகவும் காரமுள்ளதும் வாயுவைச் சமனிக்கக் கூடியதும் உடம்பின் அழலை மாற்றக் கூடியதுமானதுபற்றி அஜீரண வியாதி, வாதநோய், விஷ வியாதி, மருந்தின் விஷம், இவைகளை நீக்கக் கூடியது.

இதை இரத்தபேதி உண்டாய் இருக்கும்போது தூள் செய்த மிளகு 10 கிரெயின் முதல் 15 கிரெயின் வரையில் நெய்யில் கலந்து கொடுத்தால் இரத்தம் கொட்டுவது நின்றுவிடும்.

இதை ப்ரயோகங்களிலும் லேகியங்களிலும் சூரணங்களிலும் சேர்ப்பதுண்டு. இதன் கஷாயம் உண்டால் ஜுரத்திற்கு மும்முரம் குறையும். தலைவலி நீங்கும், உஷ்ணம் குறையும். பாஷாணம் சேர்வாளம் ஆகிய விஷ மருந்துகளை உண்டவர்களுக்கு கஷாயம் மிகவும் குணம்தரும். 40 நாளைக்கு $\frac{1}{4}$ பலம் மிளகை $\frac{1}{4}$ படி சலம்விட்டு அரைக்கால் படியாகச் சுண்ட கஷாயம் காய்ச்சி காலை மாலைகளில் உட்கொண்டு வந்தால் சகல விஷமும் நீங்கும்.

வாந்திபேதிக்குக் கற்பூரம் 1 பங்கு மிளகு 4 பங்கு அபினி $\frac{1}{4}$ பங்காக சேர்த்து அரைத்து மாத்திரை செய்து உபயோகிப்பது உண்டு. கட்டிகளுக்கு இதைப் பாலில் அரைத்து தடவலாம். தொண்டைப் புண் மூல வியாதிகளுக்கு மேல் பூசலாம்.

வயிற்றிலுள்ள அழலை மாற்றும் மிளகு ஜீரணப் பையின்மேல் வேலை செய்யும். உஷ்ண இருமல்களுக்கும் சளிப்புக்கும் வெல்லமும் மிளகுத் தூளும் சமமாய்க் கலந்து சுண்டாக்காய்ப் பிரமாணம் உட்கொண்டால் வியாதி நீங்கும்.

மிளகு சீரகமும் சமபாகம் தூள்செய்து 10 முதல் 20 கிரெயின் வரை சாப்பிட்டால் அசீரணம் பசி மந்தம் ஏப்பம் உஷ்ணபேதி இவைகள் நீங்கும். வேண்டுமானால் உப்பும் சேர்க்கலாம்.

மிளகை முலைப்பாலில் இழைத்து கண்ணில் போட பித்தத் தலைவலி நீங்கும். நாள்பட்ட சீதபேதியில் ஒரு கிரெயின் தூள் நெய்யில் கொடுக்க தீரும்.

மிளகை பாலில் அரைத்து கொதிக்கவைத்து தலைக்கு தேய்த்து ஸ்நானம் செய்வதுண்டு. இதனால் கண்ணுக்கு குளிர்ச்சி உண்டாகும்.

மிளகு நாற்பது எடுத்து நெய்யில் வறுத்து தூள் செய்துகொண்டு நல்ல வெல்லம் ¼ பலம் சேர்த்து போதுமான அளவு நெய் சேர்த்து லேக்கியம் கிளரவும். கிளரிய லேக்கியத்தை மூன்று பாகம் செய்து 6 மணி நேரத்திற் கொருமுறை உட்கொண்டால் ஜலுப்பு, தொண்டைப்புண் இவை நீங்கும்.

மிளகு பச்சையானதை காடிக்கார சலத்தில் ஊரவைத்து பித்தத்துக்காக சாப்பிடுவது உண்டு. இதற்கு பாவன மிளகு என்று பெயர். உலர்ந்த மிளகையும் பாவனம் செய்யலாம். பித்தம் நீங்க சீரகமும் இந்துப்பும் சேர்ப்பதுண்டு, சிலர் எலுமிச்சம்பழ ரசத்தில் ஊரவைப்பதுண்டு; ஆனால் சூரியனில் வைத்தல் வேண்டும்.

வெள்ளை மிளகு வால்மிளகு என இரண்டுவித மிளகுகள் உண்டு. வால் மிளகை பாக்குத் தூளிலும் வாசனை திரவியங்களிலும் சேர்ப்பதுண்டு. சிற்சில மருந்துகளிலும் வால்மிளகைச் சேர்த்து உபயோகிக்கிறார்கள் இந்தியாவில் பெரும்பாலோர் தாம்பூலத்தோடு சேர்த்தே உபயோகிக்கிறார்கள்.

வால்மிளகும் புழுங்கலரிசியும் சேர்த்து வாயில்போட்டு அடக்கிக்கொண்டு அதில் உண்டாகும் ரசத்தை உட்கொண்டால் உஷ்ண இருமல் நீங்கும்.

வெள்ளை மிளகை மருந்துகளுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். இந்தியாவிலுள்ள சந்நியாசிகளும், மற்றும் சிலரும் வெள்ளை மிளகு, நெல்லிவித்து, வேப்பன் வித்து, கஸ்தூரி மஞ்சள், கடுக்காய்தோல் ஆகிய இவைகளை சமமாக எடுத்து தூள் செய்து பாலுடன் சேர்த்து கொதிக்க வைத்து ஸ்நானம் செய்கிறார்கள். வெள்ளை மிளகை தனியே பாலுடன் அரைத்து கொதிக்கவைத்து ஸ்நானம் செய்வதும் உண்டு. ஷை ஐந்து வஸ்துவை சேர்த்து ஸ்நானம் செய்வதே பஞ்சகல்ப ஸ்நானமாகும். வெள்ளை மிளகு மூளையின் மூலமாக உஷ்ணத்தைக் குறைத்து கண்ணிலுள்ள உஷ்ணத்தால் ஏற்படும் ரணத்தை நீக்கி பார்வையை உண்டு பண்ணும்:—

முறிவு:—உப்பு, புளி, எலுமிச்சம்பழ ரசம்.

---

# எமர்ஸனின் எழில்மொழிகள்

(ஆசிரியர், A. சுருளியாண்டி கௌட.)

1. அசூயைப்படுவது அறியாதார் தொழில்; சுய அறிவைவிட்டு மற்றொருவர் வரைந்துள்ள நூலை யனுசரித்து ஓர் நூலெழுத முயல்வது, கேவலம் தற்கொலைக்குச் சமானமாகும்; நல்லதோ, தீயதோ நமது உள்ளத்தையே நாம் ஆஸ்தியாகக் கொள்ளல் வேண்டும்.

2. நீ வலிமையுள்ளவன் என்னும் நம்பிக்கை உன் மனத்தில் எப்போதும் நிரம்பி யிருக்கட்டும்; தன்னம்பிக்கையாகிற இருப்புக் கம்பியின் நாதத்திற்கு எல்லா இருதயங்களும் அநுநாதம் செய்யும்.

3. எவனொருவன் மனிதனாக விரும்புகின்றானோ, அவன் மாமூல்களை நொறுக்குகிறவனாக இருத்தல் வேண்டும்.

4. அழியாத கீர்த்தியை விரும்புகின்றவன், தர்மம் எனும் பெயரை மாத்திரம் கண்டு மயங்கி விடலாகாது; அது அறமா இன்றா எனச் சோதித்தல் வேண்டும்.

5, உனது அறிவின் நேர்மையைப் பாதுகாத்துக் கொள்வதுதான் உனக்கு எல்லாவற்றினும் பெரிய தர்மம்; உனக்குள்ளே நீ நிஷ்களங்கனாக இருப்பாயாயின் உலகம் உன்னை நாடும்.

6. எனது அறிவுக்கு நியாயமாகப் பட்டதுதான் நியாயம்; அதற்கு விரோதமானதெல்லாம் அநியாயமே.

7. என்னுடைய கடமை என்ன என்பது தான் எனக்குப் பொருளே யன்றி, ஜனங்கள் என்ன எண்ணுகிறார்கள் என்பதன்று.

8. மூடத்தனமாக, முன் பின் முரண்படாமை யொன்றையே நாடுதல், சிற்றறிவினரைப் பீடித்திருக்கும் ஓர் பேய்.

9. சாமானிய ஜனங்களால் தூற்றப் பெறுதலே பெருமைக்குக் கட்டளைக் கல்லாகும்.

10. எவரும், தமது சுபாவத்தை மீறி விட முடியாது.

11. மனிதன் தன் யோக்கியதையை நன்றாகத் தெரிந்து கொண்டு, உலகில் காளை போன்று கம்பீரமாய் உலாவட்டும்.

12. மாமூல், பொருத்தம் எனும் கதைகளெல்லாம் இந்த நாட்களோடு தொலைந்து விடுமென நம்புகின்றேன்.




## கிருஷ்ணாலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(669-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

இராஜவேல்:—“நீ எனக்கு வைத்திருக்கும் வேலை மிக்க கஷ்டமான தெனினும், நான் உன்னைப்பூரணமாய் நம்பி அப்படியே நடந்து கொள்கிறேன்.

ஆனந்:—நான் கூறுகிறபடி பேசாமல்நட. ஒருகெடுதியும் வாராது. அப்படிச் செய்வதாயின் பத்தாவது வீதியின்கோடியில் சரியாய்ப் பதினொரு மணிக்கு ஆஜராயிரு. பனிரண்டரை மணிவரையில் அங்கேயேயிரு. என்னை நம்பி நடந்தால் முடிவில் யாவும் சந்தோஷமாய் முடியும். அதுவரையில் நான் வாராவிட்டால் நேராய் உன் அத்தை வீட்டிற்குச்சென்று அங்கு எனக்காக எதிர்பார்த்திரு. நான் பெரும்பாலும் மனோன்மணியோடு வருவேன். ஒருசமயம் என்னைக்காணாவிடினும், சற்றும் கலவரமடையாதே. நான் எப்படியாவது மனோன்மணியை யழைத்து வந்து அங்கு விட்டுவிட்டு நீ எங்கிருந்தாலும் உன்னைத் தேடிக் கண்டுபிடித்து விடுவேன். உன் அத்தையின் பெயரும் விலாசமுமென்ன கூறு.” என்றான்.

இராஜவேல்:—இரங்கம்மாள் - நெம்பர் 618, மங்கம்மாள் வீதி.

ஆனந்:—அந்தம்மாளுக்கு “சத்தியமே நித்தியம்” என்று யார் கூறுகிறார்களோ, அவர்களைப் பூரணமாய் நம்பும்படி கூறு.

இராஜவேல்.—நீர் எப்படிக்கூறுகிறீரோ அப்படியே நடந்து கொள்கிறேன். ஆனால் இந்த ஆச்சரிய சங்கதிகளை யெல்லாம் கேட்டபிறகு என்மனம் பெரிய கலவரமடைந்து விட்டது.

ஆனந்:—நீ மட்டும் நான் கூறுகிறபடி நடந்துகொள். நான் எப்படியாவது மனோன்மணியை க்ஷேமமாய்க் கொண்டுவருகிறேன். நீ யப்படி செய்யத் தவறினால் மனோன்மணியின் உயிருக்கே ஆபத்து நேர்ந்துவிடும்.

இராஜ:—நான் கட்டாயம் நீர் கூறுகிறபடியே செய்வேன். தவற மாட்டேன். ஆனால் ஒரு விபரமும் தெரியாமல் கண்மூடித்தனமாய் ஒருவர் சொற்படி நடப்பது கஷ்டம்

ஆனந்:—“அது எனக்குத் தெரியும். ஆனால் உனக்கு இப்போது இன்னும் அதிகமாய்க் கூறுவதில் ஒருபயனுமில்லை. மேலும் இப்போது அவகாசமுமில்லை.” என்றான்.

---

## 10—வது அத்தியாயம்

இராஜவேலை விட்டுப் புறப்பட்ட ஆனந்தஸிங் தன்னால் கூடுமானால் எப்படியாவது பிச்சனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு சென்றுகொண்டிருந்தான். நற்காலமாய் நகரத்தின் ஜன சஞ்சாரமற்றதும் மிக்க அபாயகரமானதுமாகிய ஒரு வீதியில் அம்முரடனைக் கண்டதே அவன் மிக்க வியப்பும் சந்தோஷமு மடைந்தான்.

பிச்சன் நன்றாய்க் குடித்திருந்ததால் தன் இயற்கையான எச்சரிக்கையை மறந்து விட்டதால் ஆனந்தஸிங் அவனைப் பின்தொடர்ந்து போய் அவன் அறைக்குள்ளும் சென்று ஒருநொடிக்குள் தன்னிடமிருந்த ஒரு ஔஷதத்தில் கொஞ்சம் அவன் வாயில் ஊற்றி அவனை ஸ்மரணை தப்பி விழும்படி செய்து அங்கிருந்த ஒரு மஞ்சத்தில் படுக்க வைத்துவிட்டான்.

ஆனந்தஸிங் தன் மனதிலிருந்த நோக்கத்திற்குத்தக்க ஆயத்தமாகவே வந்தான். அதனால் பிச்சன் முகத்தை நன்றாய் உற்றுப் பார்த்துக்கொண்டே தான் கொண்டுவந்திருந்த பொய்ச்சிகையை யெடுத்து அதற்கு சாயம் பூசி கத்தரித்து பிச்சன் சிகைபோல் செய்து, பூரணமாய்ப் பிச்சன் போலவே மாறுவேட மணிந்து கொண்டான்.

அதன்பிறகு பிச்சனைச் சோதித்தான். அவன் உட்சட்டையி லிருந்த கள்ளப்பையில் ஆயிரம் ரூபாய் நோட்டுகள் பத்தொன்பது இருந்தன. வெளிச்சட்டை சேபியில் சில நூறுரூபாய் நோட்டுகள் இருந்தன. ஆனந்த ஸிங் யாவற்றையும் எடுத்துக்கொண்டு பிச்சன் சீக்கிரத்தில் எழுந்திருக்க மாட்டானென்று தெரிந்துகொண்டு அறையைப் பூட்டி சாவியை யெடுத்துக் கொண்டு வெளிப்பட்டான்.

சுமார் பத்தரை மணிக்கு ஆனந்தஸிங் ஒரு வண்டி கிடங்குக்குச் சென்று இரட்டைக் குதிரை வண்டி யொன்று வாடகைக்கு வாங்கிக் கொண்டு தானே சாரதியாய் ஓட்டிக்கொண்டு சரியாய் பதினொன்றடிக்க இரண்டொரு நிமிட மிருக்கையில் சௌக் வீதியில் பிரவேசித்தான். அது ஒரு ஜன சஞ்சாரமற்ற வீதி.

முனியன் அங்கு மனப்பதைப்போடு முன்னும் பின்னுமாய் உலவிக் கொண்டிருக்கிறான். பிச்சன் எங்கே வேலை தப்பி வருகிறானோ வென்று கலவரப்பட்டுக்கொண் டிருந்தானையால் வண்டியைக் கண்டதே முக மலர்ச்சி யடைந்து, "ஓகோ! பிச்சா! நல்ல வேளைக்கு வந்து விட்டாய். எங்கே தவறி விடுவாயே என்று எனக்குப் பயமாகவே யிருந்தது" என்றான்.

ஆனந்தஸிங் பிச்சன் குரல்போலவே "காலந் தப்பிவர என்ன காரண மிருக்கிறது ?" என்றான்.

**முனியன்:**—"இந்த விஷயம் எவ்வளவு முக்கியமானது தெரியுமா ? நீ வரா விட்டால் எங்களுக்குப் பெருங் குழப்பமாய் விடுமே"

**ஆனந்:**—"சரி இப்போது நான் நடந்து கொள்ளவேண்டியது இன்னவித மென்று எனக்குத் தெரிவித்து விட்டால் நான் ஆயத்தமாயிருப்பேன்.



# வர்த்தமானப்பகுதி

## பெட்டியில் பைசைக்கில்.

ஒரு பிரான்சு பைசைக்கில் கடைக் காரரால் ஒரு சிறிய பெட்டியில் அடங்கக்கூடிய மடக்குச் சைக்கில் ஒன்று செய்யப்பட்டுள்ளதாம். சக்கரங்கள் மிகச் சிறியவையாயினும் ஆசனத்தையும், கைப்பிடியையும் எவ்வளவு வேண்டுமாயினும் உயர்த்திக் கொள்ளலாம். ரயில் பிரயாணத்தின் போது சிறிய டைப் மெஷினைப் பெட்டியிலிட்டுத் தூக்கிச் செல்வது போல் இதையும் கொண்டு செல்லலாமாம். சாதாரணமான சம நிலத்தில் அவ்வண்டி மணிக்குச் சுமார் 20-மைல்கள் போகுமாம்.

***

## 10,000,000 வருஷத்துப் பூனை.

பூனைகள் யாவும் பிறப்பதற்கு ஆதி காரணமான மூலப் பூனைவர்க்கம் நெப்ராஸ்கா என்னுமிடத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள 10,000,000 வருஷங்களுக்கு முற்பட்ட எலும்புகளின் சொந்தக்காரப் பூனை வர்க்கமே என சிகாகோ சர்வகலாசாலையிலுள்ள அறிஞர் பால் சி. மில்லர் என்பவர் கருதுகின்றார். இப் பூனையின் நீளம் 4-அடியாம். அதன் பற்கள் கோடாலி போன்று வலிமையும், கொடுமையும் வாய்ந்தனவாம்.

***

## கொம்புகள் முளைத்துள்ள குழந்தை.

பர்மாவில் மோல்மீனுக் கருகாமையில் சாதப்யன் என்னும் சிற்றூரில் மாப்பியூ என்ற மாது சமீபத்தில் இரண்டு கொம்புகள் முளைத்துள்ள குழந்தையைப் பெற்றெடுத்தாளாம். அக் குழந்தையின் வாய் பூதத்தைப் போன்றுள்ளதாம். தலை மட்டும் 5 வீசைப் பாரமிருக்கிறதாம். மூக்குத் துவாரமும் வாய்த் துவாரமும் ஒன்றே தானாம்.

***

## ஆடு நாயாய் விட்ட அதிசயம்.

அம்ருத பஜார் பத்திரிகையில் திரு. அதுலானந்தர் என்பவர் தன் கிராமத்தில் பல நாய்க்குட்டிகளோடும் நாய்ப் பாலே தாய்ப் பாலாய் வளர்ந்து வந்த ஒரு ஆடு முழுவதும் நாய்க் குணங்களே உடையதாகி விட்டதெனத் தெரிவிக்கின்றார். தாயற்ற இவ்வாடு நாய்ப் பாலையுண்டு நாய்க் குட்டிகளுடனேயே வளர்ந்து வந்துள்ளது. இப்போது இவ்வாடு நாய்கள் குலைக்கும்போது தானும் குரைத்தும், அவைகளைப் போன்று எஜமானின் வீட்டைக் காவல் காத்தும் மற்ற நாய்களோடு நரி வேட்டை யாடியும் காலங் கழிக்கின்றது. உருவத்திலும் குரலிலும் மட்டுமே வித்யாசம் தெரிகின்றது.

***

## கடலில் மிதக்கும் தபால்.

ஸெண்ட் கில்டா என்ற தீவில் தபாலாபீஸே கிடையாதாம். அங்குள்ளவர்கள் மிதக்கக் கூடிய தோற்பை யொன்றில் கடிதங்களை நிரப்பி அதைக் கடலில் மிதக்க விட்டுவிடுவார்களாம். அப்பைக்குள் தபால் கட்டணத்தையும் போட்டு விடுவார்களாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கில வருஷம் ஆவணி மாதம்—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கோல்லமாண்டு 1105—ஹிஜரீ 1348,**
**இங்கிலீஷ் 1929 வருஷம்—ஆகஸ்டு மாதம்—செப்டம்பர் மாதம்**

| ஆவணி | ஆகஸ்டு | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | ஏகா3-28 | மூல10-25 | அ10-25பி | வரலக்ஷ்மி விரதம் |
| 2 | 17 | சனி | து9-28 | பூரா17-43 | சித்60 | சனிப்பிரதோஷம், கரிநாள் |
| 3 | 18 | ஞா | திர14-50 | உத்24-25 | அமி60 | சீமந்தம், சர்வ முகூர்த்தம் |
| 4 | 19 | திங் | சு○19-23 | திரு30-18 | அ30-18சி | பௌர்ணமி, ருக் உபாகர்மம், ரகிபூர்ணிமா |
| 5 | 20 | செவ் | பவு22-58 | அவி35-13 | சி35-13ம | யஜுர்வேத உபாகர்மம், ஆவணி அவிட்டம் |
| 6 | 21 | புத | பிர25-30 | சத39-10 | சி39-10அ | காயத்ரி ஜபம் |
| 7 | 22 | வியா | துதி27-10 | பூர42-15 | சித்60 | அசூன்யசயன விரதம் [ம் |
| 8 | 23 | வெ | திரி27-53 | உத்44-23 | சி44-23அ | சுபமுகூர்த்தம், வித்யாரம்ப |
| 9 | 24 | சனி | சது27-38 | ரேவ45-35 | ம45-35சி | கரிநாள், சங்காஷ்ட சதுர்தி |
| 10 | 25 | ஞா | பஞ்26-20 | அஸ்45-45 | சித்60 | பும்சவனம், சுபமுகூர்த்தம் |
| 11 | 26 | திங் | சஷ்24-5 | பர45-10 | சி45-10ம | அவமாகம், சீதளாசப்தமி |
| 12 | 27 | செவ் | சப்20-45 | கி✻43-8 | சித்43-8அ | கிருத்திகை, கோகுலாஷ்ட |
| 13 | 28 | புத | அஷ்16-23 | ரோ40-13 | சித்60 | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி [மி |
| 14 | 29 | வியா | நவ10-58 | மிரு36-20 | மர60 | |
| 15 | 30 | வெ | தச4-35<br>ஏகா57-38 | திரு31-35 | சித்60 | |
| 16 | 31 | சனி | து50-10 | புன26-15 | சித்60 | |
| 17 | 1 | ஞா | திர42-30 | பூச20-38 | சித்60 | |
| 18 | 2 | திங் | சது35-33 | ஆயி15-0 | சித்15-0ம | |
| 19 | 3 | செவ் | அ●28-13 | மக9-55 | சித்60 | |
| 20 | 4 | புத | பிர22-28 | பூர5-38 | அமி60 | |
| 21 | செப்டம்பர் 5 | வியா | துதி18-5 | உத்2-38 | ம2-38சித் | |
| 22 | 6 | வெ | திரி14-48 | அஸ்1-20 | அ1-20சித் | |
| 23 | 7 | சனி | சது14-38 | சித்1-48 | மர1-48அ | ரிஷிபஞ்சமி, விநாயகசதுர்த்தி |
| 24 | 8 | ஞா | பஞ்15-48 | சுவா4-18 | சித்4-18ம | சஷ்டி |
| 25 | 9 | திங் | சஷ்18-20 | விசா8-35 | ம8-35சித் | சம்பா சஷ்டி, சூரிய சஷ்டி |
| 26 | 10 | செவ் | சப்23-15 | அனு14-25 | சி14-25மர | தூர்வாஷ்டமி |
| 27 | 11 | புத | அஷ்28-58 | கே21-20 | சி21-20மர | நந்தநவமி, அதுக்க நவமி |
| 28 | 12 | வியா | நவ35-15 | மூல28-48 | சித்60 | கரிநாள் |
| 29 | 13 | வெ | தச41-13 | பூரா36-13 | பி36-13சி | கெஜலக்ஷ்மி விரதம் |
| 30 | 14 | சனி | ஏகா46-35 | உத்43-0 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 31 | 15 | ஞாய | து53-10 | திரு48-53 | அ48-53ம | கல்கி துவாதசி |

| | ராகு | குரு | சுக் |
|---|---|---|---|
| — | 10-கன்-புத<br>10-கடக-சுக் | | —<br>சூரி<br>புத |
| சனி | | கே | செ |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**SAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**